43. [1]அறம் கரை நாவின் ஆன்றோர் பள்ளி - தருமத்தைச் சொல்லும் நாவையுடைய [2]தவத்தினர்க்கு மடமெடுத்துக் கொடுத்தல்;

44. கடவுள்[3] நண்ணிய [4]தடவுநிலைக் கோட்டம் - தேவர்கள் எழுந்தருளிப் பூசைகொண்டருளுகைக்காக உயர்ந் திராநின்ற தேவாலயங்களை யெடுத்தல்;

45—6. (இனையவை........அறத்துறை) இனையவை முதல— இத்தன்மையனவாகிய இவை முதலாக; [5]நினைவரும் திறத்த புரத்தல்—[6]நினைத்தற்கரிய கூறுபாடான புண்ணியங்களைச் செய்தல்; அறத்துறை—புண்ணியகன்மமாம்;

46—48. (மறத்துறை........உணர்ந்திசினோரே) மறத்துறை— பாவ கன்மமாவது; இவற்றின் வழிப்படாது—இப்படிச் சொல்லப் பட்ட புண்ணிய கன்மங்களைச் செய்யாது; [7]எதிர்வன கெழீஇ

---

1. எல்லா உயர் குணங்களாலும் அமைந்தோராதலின், அறமல்லது கூறாத இயல்பின ரென்றற்கு "அறங்கரை நாவின் ஆன்றோர்" என்றார். அவர் இருந்து அறம் புரியுமிடம் பள்ளி யெனப்பட்டது.
2. விஷயங்களை யவிந்தவர்களாகிய—உ. வே.
3. கண்ணிய என்ற பாடத்திற்கேற்பத் தேவர்கள் பூசைகொண்டருள என்று உரை கூறியபிரதியுமுண்டு. சுவர்க்கத்தைக் கிட்டுவது போன்ற—உ. வே.
4. "தடவுங் கயவும் நளியும் பெருமை" (தொல் சொல், உரி. 22) பெருமை, ஈண்டு உயர்ச்சி குறித்து நின்றது. "தடவு நிலைக் கொன்றை"(குறு. 66) என்றாற் போல.
5. உயிர்கள் அளவிறந்தனவாதலின், அவற்றின் பொருட்டுச் செய்தற் குரிய அறங்களும் அளவிறந்தன என்றற்கு "நினைவரும் திறத்த அறத்துறை" யென்றார்.
6. இன்னபடி யளவென்று நிச்சயித்தற்கரிய வேறுபாடான—உ. வே. நிச்சயித்தற்கரிய வாகிய புண்ணிய வகைகளைச் செய்தல்—உ. வே.
7. இத்துணையும் மனம், வாய், மெய் என்ற முக்கருவிகளாலும் செய் தற்குரிய அறத்துறைகள் பலவற்றை விரியக் கூறிய ஆசிரியர், மறத் துறையை, 'இவற்றின் வழிப்படாது எதிர்வனகெழீஇ யுஞற்றல்" என்றொழிந்தார்; அவற்றை விரித்துரைப்பது அறமாகாமையின். இம் மறத்துறையை மணிமேகலையாசிரியர், "தீவினையென்பது யாதென வினவின், ஆய்தொடி நல்லா யாங்கது கேளாய், கொலையே

உஞற்றல்—இவையிற்றுக்குமாறுபாடாயவற்றைக் கெழுமிச் செய்தல்; என்ப உணர்ந்திசினோர்—என்று சொல்லுவர் ஞானவான்கள் எ. று.

மாதும் ஓவும் அசை.

## அகவல் 25.

### கன்மபந்த நிலை

இசைத்த மூன்றி னசைப்புற விறந்த
ஆருயிர்க் கின்பத் துன்ப நேரிய
துடியிடைப் படாது கடிகொள வியற்றி
எற்பிறர் பிறர்க்கியான் றப்பறத் தந்தென
மனப்பசை யிம்மைய வம்மை வினைத்திறன்
ஆண்டுப் பூட்சி யீண்டுப்பட வியற்றல்
சார்ந்தவை [1]வதிதல் யாங்கு வீங்காது
ஆடிப் படர்ந்த பேரிருள் புடமடி
கூடிய குற்றங் கோடேந் தல்குல்
மாதோர் பாகற் சேர்வோ ரின்பம்
பாதவக் [2]கண்ணிழல் பனுவல் கோளிப்
பெரும்பணை பொதிந்த சிறுநுண் வித்தின்

---

களவே காமத் தீவிளைவு. உலையா வுடம்பில் தோன்றுவ மூன்றும், பொய்யே குறளை கடுஞ்சொற் பயனில், சொல்லெனச் சொல்லில் தோன்றுவ நான்கும், வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென் றுள்ளந் தன்னின் உருப்பன மூன்றுமெனப், பத்து வகையாற் பயன்தெரி புலவர், இத்திறம்படரார்" (30 : 64-73) என்பர்.

1. வியப்புற—பா. வே.

2. தண்ணிழல்—பா. வே.

இருந்தவை விரியு மிருவினைக் கியைந்த
[1] நாற்கதி யார்த்தவிழ் நரலைப் புணரி
மூவகைத் துக்கத்து முடியும்
மாவகை வீழ்த்த மன்னுயிர்ப் பரப்பே

இது, மேற்கூறிய மன வாக்குக் காய கன்மங்களால் புண்ணியமும், பாவமும் பந்தமானபடி எங்ஙனம் என்னக் கன்ம டந்தமும் நிலையும் விரயுங் கூறியது.

1—3. உரை; (இசைத்த... இயற்றி) ஆருயிர்க்கு இசைத்த மூன்றின்-நிறைந்த ஆன்மாக்களுக்கு முற்பாட்டிலே சொல்லப்பட்ட [2] மன வாக்குக் காய கன்மங்களின்; அசைப்புற விறந்த இன்பத் துன்பம்—[3] அசைவு அசைவில்லாமைகளால் செறிந்த சுகதுக்கங்

---

1. நாற்கதி நரலி ; நாலையார்த்நவிழ் புணரி—பா. வே.
2. மன வாக்குக் காய கன்மங்களின்—உ. வே.
3. மன முதலிய மூன்றின் அசைவு அசைவின்மை காரணமாக வினையிட்டப்படுமென்னும் இதனை, மனமுதன் மூன்று மசைவற நின்று வந்திடு நல்வினை பலவே, மனமுதன் மூன்று மசைவற நின்று வந்திடு தீவினை பலவே, மனமுதன் மூன்றும் புடைபெயர்வுற்று வந்திடு நல்வினை பலவே, மனமுதன் மூன்றும் புடைபெயர்வுற்று வந்திடு தீவினை பலவே" (தணிகை—நந்தி) என்று கசசியப்ப முனிவர் கூறுதல் காண்க. இனி, இலக்கணக் கொத்துடையார் இம்மூன்றுடன் அறிவையும் கூட்டி, "மனமொழி மெய்யறிவாகிய நான்கின், அசைவேயாகியும் அவ்வசைவின்றியும்" (இலக் 81) வினை நடக்கும் என்பர். இனிப் பட்டினத்தடிகள் இவ்வினைகளால் இன்பமும் துன்பமுமே மனத்தாற் காணப்படுகின்றன என்பார், "செய்தன சிலவே செய்வன சிலவே, செய்யா நிற்பன சிலவே யவற்றிடை நன்றென்ப சிலவே, தீதென்ப சிலவே, ஒன்றினும் படாதென சிலவே என்றிவை கணத்திடை நினைந்து களிப்பவும் கலுழ்பவும், கணக்கில் கோடித் தொகுதி" யென்றும், "அளிய மனத்தின் செய்கை மற்றிதுவே" யென்றும் (கோயில். நான் 32) கூறுவர். மனமுதலிய மூன்றனுள் தலைமையும் காரணமுமாதல் பற்றி மனமெனக் கூறியொழிந்தமையின் பட்டினத்தடிகள் கூறுவது மூவாறுமையறிக. வழிநிலை—பா. வே.

களை; நேரிய துடி இடைப்படாது கடிகொள இயற்றி—நுண்ணிய துடியென்னும் தகியா அவ்வளவு காலமேனும் இடைவிடாது [1]விரையச்செய்து;

4—5. (எற்பிறர்..........இம்மைய) எற்பிறர் பிறர்க்கு யான் தப்பறத் தந்தென—எனக்குப் பிறர் நன்மை செய்தாரென்றும் பிறர்க்கு யான் நன்மை செய்தேனென்றும்; மனப்பசை—எப்பொழுதும் [2]சித்தத்திலே மமதை பண்ணிக் கொள்ளுமவை; இம்மைய—சுயங்கன்மமாவன;

5—6. (அம்மை........இயற்றல்) அம்மை வினைத்திறன்—பூருவ கன்மமாவது; [3]ஆண்டுப் பூட்சி ஈண்டுப்பட இயற்றல்—முன்பெடுத்த தேகங்களிலே இப்போதில் எடுக்கும் தேகத்தில் அனுபவித்துக் கொள்கைக் கேதுவாக ஆர்ச்சித்து அகங்கரித்துக் கொண்ட கன்மம்;

7—10. (சார்ந்தவை...........இன்பம்) அவை சார்ந்து வதிதல் யாங்கு—அக்கன்மங்கள் ஒருவனிடத்திலே ஆர்ச்சிதமானவாறும் கிடந்து பக்குவப் படுமாறும் எங்ஙனே யென்னில்; விங்காது—[4]ஒரு

1. கடுகச் செய்து—உ. வே.

2. சித்தத்திலே மமதை பண்ணிக்கொள்வது கன்ம வீட்டத்துக்குக் காரணமாதலே, அருணந்தி சிவனாரும் 'யான் செய்தேன் பிறர் செய்தார் என்னதி யானென்னு மிக்கோணை ஞான வெரியால் வெதுப்பி நிமிர்த்துத் தான் செவ்வே நின்றிடவத் தத்துவன்முன் நேரே, தனையளித்து முன்னிற்கும் வினையொளித்திட்டோடும், நான் செய்தேனெனுமவர்க்குத் தானங்கின்றி நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்கும் கன்மம்'' (சிவ. சித்தி. 10 : 2) என்று கூறுவர்.

3. எக்காலத்தும் எந்நிலையினும் ஆன்மா உடம்பெடுத்தல்லது வினை செய்தல் கூடாமையின், "ஆண்டுப் பூட்சி" என்றும், ஒரு பிறப்பில் ஈட்டிய வினைப் பயனை வேறு பிறப்பில் நுகர்தல் கூடுமோ வென்னும் கடாவை யாசங்கித்து வரு பிறப்பில் நுகருமாறு முன்னைப் பிறப்பில் வினையீட்ட லுண்டென்பார், "ஆண்டுப் பூட்சி ஈண்டுப் பட வியற்றல்" என்றும் கூறினர். படுதல், ஈண்டு நுகர்ச்சிப் பொருட்டு.

4. இங்கே, ஒருவனிடத்தக் கூடின படிக்குத் திட்டாந்தம் அருளிச் செய்தபடி என்றொரு தொடர் செப்பறைப் பிரதியிற் காணப் படுகிறது.

காலத்தே ஒரு முறையிற் [1]பெருகாது; ஆடிப்படர்ந்த [2]பேரிருள்—கண்ணாடியில் படிப்படியாக ஏறிப் பெரியமாசு கூடினாற் போலவும்; புடம் மடி கூடிய குற்றம்—சுத்தமான கூறை மாசேறினாற் போலவும்; கோடு ஏந்து அல்குல் மாது ஓர் பாகன் சேர்வோர் இன்பம்—பக்கம் உயர்ந்து அகலிய நிதம்பப் பிரதேசத்தையுடைய மாதை ஒருபாகமாக வுடையனான பரமசிவனை யோகம் பண்ணுவார்க்கு மேன்மேல் பரமானந்த சுகம் கூடினாற் போலவுமாம்.[3]

[4]இது கன்மம் ஆர்ச்சித மானவாறு கூறியது.

**11—13.** (பாதவக் கண்ணிழல்.......விரியும்)[5] பாதவக் கண்நிழல்-விருக்கத்தில் உச்சிப் பொழுதில் அடங்கின நிழல் விரியுமாறு போலவும்; பனுவல்—[6]தான் கற்ற கல்விப் பரப்பானது தன்னிடத்திலே அடங்கிக்கிடந்து பரிணமித்தாற் போலவும்; [7]கோளிப் பொம்பணை பொதிந்த சிறு நுண் வித்தின்—ஆலினுடைய பெரிய கிளை முதலிய பரிணாமமெல்லாம் அடங்கிய சிறிய நுண்ணிய அவ்வாலம் வித்திற் கிடந்து பரிணமித்தாற் போலவும்; இருந்து அவை விரியும்—

---

1. பரிணமியாதே கண்ணாடியிலேறின மாசு—உ. வே.
2. கண்ணாடியிற் படியும் மாசு படிப்படியாகப் பெருகி அதன் ஒளி முற்றும் இன்றாக மறைத்து விடுதல் பற்றி, அதனைப் "பேரிருள்" என்றார்; இருளைப் பயத்தலின் இருள் எனப்பட்டது.
3. இவ்வினைகள் அசுத்தம், சுத்தாசுத்தம், சுத்தம் என மூவகைப் போகங்களைப் பயப்பன வாதலின் அவற்றிற்கேற்ப, மூன்று எடுத்துக்காட்டுக்கள் காட்டப்பட்டுள்ளன வென்றறிக.
4. இது சில பிரதிகளில் இல்லை.
5. இக்கருத்து "தீயவை செய்தார் கெடுதல் நிழல் தன்னை, வீயாதடி யுறைந் தற்று" (குறள் **208**) என்பதை நினைப்பித்தல் காண்க. சில பிரதிகள் பாதவக் கண்ணிழல் என்பதன் உரைத் தொடக்கத்தில், இக்கருத்தை யியைத்து, "இவ்வண்ணம் ஆர்ச்சிதமாய்ப் பந்தித்த கன்மம் பக்குவப்பட்டு அனுபவிக்கப்படும் கிரமம் எங்ஙனே யென்னில" என்று கூறுகின்றன.
6. "கற்றநூற் பொருளுஞ் சொல்லுங் கருத்தினி லடங்கித் தோன்றும்" (சூ. 1 : 31) என்பது சிவஞான சித்தியார்.
7. "சிற்றுபகாரம் வற்றல் செல்லா, தால வித்திற் பெருகி ஞாலத்து, நன்றி யீன்றது" (பெருங். iv. 7, 223–5) என்றார் பிறரும்.

[1] காரணமான கன்மத்திலே புண்ணிய பாவங்களாகிய கன்மங்கள் [2] காரிய ரூபமாய்க் கிடந்து பக்குவப்பட்டபோது கன்ம பலங்களாகிய சுகமும் துக்கமுமாய் விளையும்; [3]

[4] இது கன்மம் அனுபவிக்குமாறு கூறியது.

13—16. (இருவினைக்கு........பரப்பே) [5] மாவகை வீழ்ந்த மன் உயிர்ப் பரப்பு—[6] மகத்தாயிருக்கின்ற தன்னுண்மையும் வினையுண்மையும் உணராமல் மறந்துவிட்ட நித்தியமான ஆன்ம வர்க்கங்கள்;

---

1. இக்கன்மங்கள் பிரவாகானாதியன்றிப் பதி முதலிய பொருள் போல அனாதியல்லவென்பாரும், பதி முதலிய பொருள் போல அனாதியேயென்பாரும் என இரு திறத்தராகிய ஆசிரியருள் இவர் பிற்கூறிய திறத்தினராதலின், ஈண்டு, மூல வினைக்கண் இருந்து விரியுமாறு கூறினாரென்க. பிறுண்டு இந்நூலாசிரியர், "ஆணவ முதலன்றது போற் கருமமும், கான்ன அலரெனின் அக்கரைசழி நாறுவிதும் இனிதுயிர்கட் குதவுது எதனால், அற்றது மாயையு மற்றறிய வணே" (ஞாற. 29) என்று மூலகன்ம முண்மை கூறுதல் காண்க. இவர்போலவே, உமாபதி சிவனாரும், "ஏக னனேக னிருள் கருமம் மாயையிரண் டாகவிவை ஆறு ஆதியில்" (திருவருட். 52) என்பர்; அருணந்தி சிவனார் பிரவாகானாதி யென்பர்.
2. காரியமான புண்ணிய பாவமாய்க் கிடந்து—உ. வே.
3. பாதவக் கண்ணிழல் பிராரத்த வினைக்கும், பனுவல் ஆகாமிய வினைக்கும், கோளிவித்துச் சஞ்சிதத்துக்கும் உவமாதலறிக சில பிரதிகள் "பாதவக்கண்ணிழல்" என்பதன் உரைத்தொடக்கத்தில் இக்கருத்தை இயைத்து "இவ்வண்ணம் ஆர்ச்சிதமாய்ப் பந்தித்த கன்மம் பக்குவப்பட்டு அனுபவிக்கப்படும் கிரமம் எங்ஙனே என்னில்" என்று உரை கூறுகின்றன.
4. இது ஆர்ச்சிதமான கன்மம் பக்குவப்பட்டுவர அனுபவிக்குமாறு கூறியது—உ. வே.
5. ஆன்மா, தன்னியல்பையும் தான் பசுவாதற் கேதுவாகிய பாச வியல்பையும் உள்ளவாறு காண்டலே ஈண்டு "மாவகை" யென்றும், அவ்வாறு கண்டு சழித்த வழி உளதாய் நிற்கும் ஞான சொரூபத்தைக் கண்டு அடைத்தேறுவதை விட்டு, மீள மீள வினைகளையே யீட்டித் துயருறுவது தோன்ற, "வீழ்ந்த" என்றும் கூறினர்.
6. கருத்தாவாய் இருக்கப்படாநின்ற வுண்மையை யுணராதே நித்திய மான ஆன்ம வர்க்கத் திரள்—உ. வே.

இருவினைக்கு இயைந்த நாற்கதி—பக்குவப்பட்ட கன்மபலம் அனுபவிக்கைக்குப் [1]பொருந்தின [2]நான்கு வர்க்கத்துச் சரீரங்களை; ஆர்த்து அவிழ் [3]நரலைப்புணரி—எடுத்தும் விட்டும் ஆரவாரித்துத் திரிகிற பிறப்பாகிய சமுத்திரத்தில்; மூவகைத் துக்கத்து முடியும்—ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் ஆதியாத்தியான்மிகம் என்று சொல்லப்பட்ட மூவியல்பினவாகிய துக்கத்துக்குள்ளே முடிவனவாம் எ.-று.

---

## அகவல் 26

## மூவகைத் துக்கங்கள்

[4]ஆதி தைவிக மாதி பௌதிகம்
ஆதி யாத்தியான் மிகமென வோதிய
துக்க மூன்றி னுளாத்தி யான்மிகம்
மெய்யின் மனத்தி னெயமி லிரண்டே

---

1. செய்த கன்மத்துக் கேற்ப நால்வகைப் பிறப்பும் உண்டாகின்றனவென்பதை அருணந்தி சிவனார், "கண்டுகொள் யோனி யெல்லாம் கன்மத்தான் மாறுமென்றே" (சிவ. சித். 2 : 43) என்பது காண்க.

2. நான்கு வர்க்கம்: உற்பீசம், அண்டசம், சராயுசம், சுவேதசம்.

3. நரலையை யுடைய புணரியென வேற்றுமைத் தொகை. நரலை, ஆரவாரம். "வயிரெழுந் திசைப்ப வால்வளை நரல" (முருகு. 110) என வருதல் காண்க.

4. ஆதி தைவீக முதலிய மூன்றனையும்பற்றிக் கிரணாகமம், "ஆத்⁴யாத்ம மாதி⁴பௌ⁴திகம் ஆதி⁴தை³விகமேவ ச । த்ரிவித⁴ம் து³:க²ம் ப்ரோக்தம் தேஷாம் ஆத்⁴யாத்மிகம் ஶ்ருணு ॥ ஆத்⁴யாத்மிகம் த்³விவித⁴ம் ப்ரோக்தம் ஶாரீரம் மானஸம் ததா² । ஶாரீரம் வாதாதி³ ஜாதம் ஜ்வரஶிரோத்யாதி³ அனேகதா⁴ ॥ மனோரோக³ விஶாதே³ஶ்ச காமக்ரோத⁴ ப⁴யாதி³பி⁴: । ப்ரோக்தம் ஶாரீரமானஸம் ஶ்ருண்வந்து । ஸோமகா ஸலிலாக்³னி ஸமாசாரம் வாயுராதி³ஹி தை³வச ॥ ஏவம் மானஸமித்³யுக்தம் மாயோஹணிகம் உச்யதே ।

வளியிற் பித்தின் விளியா வீளையின்
ஊனுகு தொழுனேயி னுதகக் கொட்டின்
வெப்பிற் சூலையின் மக்களின் விலங்கின்
அலகையிற் கள்வரின் பறவையி னிருதரின்
மைந்தர் மகளிர் மணந்திடை தணப்பிற்
பேரறம் வளர்ப்பிற் பெருந்திரு நுகர்வின்
சீரிய யாக்கை மாதுயர் மாசு
மனத்துறு துயர நினைப்பருஞ் சோகம்
அறிவுரு வாக்க மடையுநர்ப் பொருமை
மானமாக் கலம் பூணாது மறுத்தல்
இச்சையி னிசைத விருஞ்சின மிகுத்தல்
இனையவை முதல நினைவருந் திறத்த
ஆதி பௌதிகஞ் சீதமா மழை
உருப்பவிர் வேனி லுட்குவரு கடுங்கால்
இருள் [1]கடி மின்னுப் பெருவிற லசனி
[2]ஒலிகட லுலகி னிலைமலி புடைய
மன்னுயிர்க் குறுகண் [3]டுன்னியாங் கருந்தல்
ஆதி யாய வீவருந் திறத்த
ஆதி தைவிகம் பேதையார் வயினக்

---

ஶீதோஷ்ணவாத வர்ஷாம்பு வைத்யுதாதி ஸமுத்ப-
வைஃ ॥ ப்ராக்ருதம் ஸாதிகம் துஃகம் ஆதிதைவிக-
முச்யதே । கர்ப்பஜந்ம ஜராஜ்ஞாந ம்ருத்யுஜம் நரகம்
ததா । ப்ராக்ருத துஃகம் த்ரயம் ஹ்யேவ ஸம்ஸாரஸ்தாநே-
ஷு ஸம்ஜ்யதே ॥ ததேதாஸ்வாமி நாமஸ்து காத்ய
ஶீக்ரம் நஶ்யாம்யஹம் । ஸம்ஸ்ருதி கோடி ஸம்பந்நம் துஃகம்
யோ நியமேந ப்ரபத்யதே ॥'' என்று கூறுகிறது.

1. இருள் கிழிமின்னு—பா. வே.
2. இவ்வடி அச்சுப் பிரதியில் இல்லை.
3. டுன்னியாறருந்தல்—பா. வே.

கருக்குழி யழுங்கல் பிறப்பிறும் பூதந்
திரை வருந்நிமை [1]வரைவில் பேதைமை
மடங்க லாருயிர் [2]தொடங்கினன் வவ்வல்
யாவரும் விழையாக் கோள்வாய் நிரயத்து
வீழ்ந்தன ரெழாஅ வான்கழி துன்பம்
இனைய மாலைய துயர்மிடை வினைநகர்
கருங்கைக் கயமைக் களிறுகைத் திரும்புலப்
பெரும்படை விரிந்து சூழத் திருந்தா
நாற்கதிப் பவனி யுலாஅய்
ஆர்த்தவிழ் திறம்பிற போற்றுமதி புரிந்தே.

இது "மூவகைத் துக்கம்" (ஞா : 25 : 15) என்னென அவற்றின் இலக்கணம் கூறியது.

1—3. உரை:—(ஆதி........மூன்றினுள்) ஆதி ஆத்தியான்மிகம் ஆதி பௌதிகம் ஆதிதைவிகம் என ஓதிய துக்கம் மூன்றினுள்—"மூவகைத் துக்கத்து முடியும்" [3] என்று சூசித்து ஓதிய ஆத்தியான்மிகம் என்றும் ஆதி பௌதிக மென்றும் ஆதி தைவிக மென்றும் [4]சொல்லப்பட்ட துக்கத் திரயங்களிலே;

---

1. யளவில் பேதமை—பா. வே.

2. தொடங்கினர் வவ்வல்—பா. வே.

3. ஞாறு : 25-15 ஈண்டுக் கூறிய மூன்றனையும் ஆசிரியர் பரிமேலழகர் தன்னைப்பற்றி வருவன, பிறவுயிர்களைப்பற்றி வருவன, தெய்வத்தான் வருவன என்று தமிழ்ப் படுத்துக் கூறுவர். (குறள். 4)

கச்சியப்ப முனிவர் "புரிதரு முறையிற் பிறழ்ந்துயிர் தெய்வம் பூதமென் றிவற்றினு ளொன்றால், மருவுழி விளைந்த விழைநில விளைந்த வனறி வேறுவன வென்னத் தரிவிதப் படுவ" (தணிகை. நந்தி. 11 : 5) என்பர்.

4. முற்பாட்டிலே சொல்லப்பட்ட மூவகைத் துக்கத் திரயாதிகளில் வைத்து—உ. வே.

3—4. (ஆத்தியான்மிகம் ............... இரண்டே) ஆத்தியான்மிகம்—ஆத்தியான்மிகமாவது; ஐயமில மனத்தின் மெய்யில இரண்டு—சந்தேகமில்லாத மனத்தைப்பற்றிவரும் விதனமும் தேகத்தைப் பற்றிவரும் விதனமுமாக இருதிறப்படும்;

5—11. (வளியின்...........மாதுயர்) வளியின் பித்தின் விளியா விளையின்-[1]வாதத்தால, பித்தத்தால, நீங்காத சிலேட்டுமத்தால்; ஊன் உகு தொழுனையின்—[2]சரீரத்திலே சதையை அழுகி விழப்பண்ணும் குட்டவியாதியால்; உதகக் கொட்டின்—[3]நீரிழிவால்; [4]வெப்பின்—

---

1. வளி முதலிய மூன்றுன் நோயுண்டாதலை, "மிகினுங் குறையினும் நோய் செய்யும் நூலோர், வளி முதலா வெண்ணிய மூன்று" (குறள். 941) என்பதனுலறிக. வளி முதலியன மிகினும் குறையினும் முறையே புளிப்பும், கைப்பும், இனிப்பும் விரும்புமென் பதைக் குமரகுருபரர், "வளியுண் புளிப்பும் பித்துண் கைப்பும், ஐயுண் மதுரமும் அல்லன பிறவும நாச்சுவை யறிய நல்கின" (சித. மும். 8) என்று கூறுதல் காண்க.

2. இது தொழுநோய் எனவும் வழங்கும், "அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோயராய்" (திருநா. பொது. தனித்திருதாண் 10) என்பது காண்க.

3. நீரிழிவினைச் சலரோகமென்றும் கூறுப; இதனல் நீரிழிவும் ஈளை மிகுதியுமுண்டாகுமாம். அருணகிரியாரும் "சூலைப்புக்காய்கனல் நீரிழிவீளையொடாளைப்புக் காதடை கூனல் விஷசிலை" (626) என்றும், "சூலைசொறி யீளைவலி வாதமொடு நீரிழிவு" (987) என்றும் கூறுதல் காண்க.

நீர்க்கோம்பால்—உ. வே.

4. வெப்பு—இதனை வெதுப்பென்பதும் வழக்கு; "நீரிழிவுகுட்ட மீளை வாதமொடு பித்தமூல நீள்குளிர் வெதுப்புவேறு முளநோய்கள்" (திருப்புகழ் 898) என்பதனுலறிக. இதன் கொடுமை பெரிய புராணத்துத் திருஞானசம்பந்தர் புராணத்து, "வேந்தனுக்கு மெய் விதிர்ப்புற வெதுப்புறு வெம்மை, காந்து வெந்தழற் கதுமென மெய்யெலாங் கவர்ந்து, போந்து மாளிகைப் புறத்துநின் ளூர்களும் புலர்ந்து தீந்து போம்படி யெழுந்தது விழுந்துடல் திரங்க" (711) என்று வரும் திருப்பாட்டாலும் பிறவற்றுலும் அறியப்படும்.

வெதுப்பு நோயால்; [1]சூலையின்—சூலை வியாதியால்; [2]மக்களின்—சத்துருக்களாகிய மானிடரால்; விலங்கின்—விலங்குச் சாதியால்; பறவையின்—கொதுகு ஈ முதலான பறவைகளால்; அலகையின்—பேய்களால்; [3]கள்வரின்—களவு காண்பவரால்; [4]நிருதரின்—இராக்கதர்களால்; [5]மைந்தர் மகளிர் மணந்து இடை தணப்பின்—ஆண் பெண்கள் கூடி இடையே பிரிதலால்; பேரறம் வளர்ப்பின்—[6]குரு லிங்க சங்கம மாது தேவதா காரிய பரிபாலனம [7]தவசு என்றிவற்றால்; பெருந் திரு—சம்பத்து மிகுதியால்; நுகர்வின்—[8]தேடல் காத்தல

---

1. சூலையின் கொடுமையை நேரே கண்ட நாவரசர், "சுடுகின்றது சூலை" "வலிக்கின்றது சூலை", 'வயிற்றொடு துடக்கிமுடக்கியிட நஞ்சாகி வந்து நலிவது" என்று கூறுதல் காண்க.

2. மக்களாலும் பிறவற்றாலும் துன்பமுண்டாதலை, "தேவின் மானிடத்திற் றுன்பம்" எனவும், "விலங்குபுட்களாதி தாவரமற்றெல்லாம், ஓவிலாததுன்பம்" என்றும் (பெரு. 439) பிறரும் கூறுதல் காண்க.

3. "அற்றம் பார்த்தல்குங் கடுங்கண் மறவர்தாம், கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர், துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலின்" (கலி 4) என்றும், "அத்தம் செல்வோர் அலறத் தாக்கிக் கைப்பொருள் வௌவுங் களவேர் வாழ்க்கைக் கொடியோர்" (பெரும்பாண் 39-41) என்றும் வருதல் காண்க.

4. "இரக்கமென்றொரு பொருளிலாத நெஞ்சினர், அரக்கரென்றுளர் சிலர் அறத்தின் நீங்கினர், செருக்கவும் யாம்படர் நெறியலாநெறி, துரக்கவு மருந்தவத் துறையு ணீங்கனேம்" (கம்ப. ஆரணி அக. 12) எனக் கம்பர் கூறுவது காண்க.

5. புறம் 249, 245 காண்க.

6. குருகண தெய்வசன்மானத்தினும் தவசினும் வரும் காயதுக்கம்—உ. வே. (புறம் 252.)

7. கந்த உற்பத்தி விடைபெறு 35.

8. "ஈட்டலுந் துன்பமற் றீட்டிய வொண்பொருளைக் காத்தலு மாங்கே கடுந்துன்பம்—காத்த, குறைபடின் துன்பம் கெடின்துன்பம் துன்பக் குறைபதி மற்றைப்பொருள்" (நாலடி 280) என்றும், 'தீயாலோ நீராலோ தேர்வேந்தர் தம்மாலோ, மாயாத தெவ்வர் வலியாலோ—யாதாலோ, இப்பொருள்போய் மாய்கின்றதென்று பொருள் வைத்தார்கட், கெப்பொழுதும நீங்கா திடர்"(புற. 1148) என்றும் வருவன காண்க.

அனுபவித்தலால் உண்டான இவை பதினன்கும்; சீரிய யாக்கை—சீரிதாகிய சரீரத்தைப் பற்றி வரும்; மாதுயர்—மிக்க விதனமாம்;

11—16. (மாசு.......திறத்த) [1]மாசுறு மனத்துறு துயரம்—மாசுடைத்தாகிய மனத்தைப் பற்றி வரும் துக்கமாவன; நினைப்பருஞ் சோகம்—பெண்டிர் மைந்தர் பிரிதலாலும் திரவிய முதலாகக் கூடியவை தம்மைப் பிரிதலாலும் ஆற்ருமையால் வரும் நினைத்தற்கரிய சோகமாகிய விதனம்; அறிவு உரு ஆக்கம் அடையுநர்ப் பொருமை—[2]ஞானம் சரீர சௌந்தரியம் ஐசுவரிய மென்ற இவையிற்றையுடையோரைக் கண்டும் கேட்டும் அழுக்காறு பொருந்திய மனத்திலே வரும் விதனம்; மான மாக்கலம் பூணுது மறுத்தல்—மானமாகிய பெரிய அணிகலத்திற்கு ஹானிவந்த காலத்து உண்டாகிவரும் விதனம்; இச்சையின் இசைதல்—பஞ்சேந்திரியங்களுக்குப் போகமான பதார்த்தங்களில் வைத்த இச்சையால் வரும் விதனம்; இருஞ்சினம் மிகுத்தல்-பெரிய சினமிகுதியால்வரும் விதனம்; இனையவை [3]முதல—இவையைந்து [4]முதலாக; நினைவரும் திறத்த—[5]நினைப்பதற்கரிய வேறுபாடுகள்பலவுமாம்.

---

1. மனத்தின்கண் மாசின்மை அறமாதலாலும் அவ்வறத்தான் வருவது இன்பமேயாதலாலும், துன்பத்துக்கேதுவாய மனத்தை, "மாசுறு மனத்துறு துயரம்" என்ருர்.

2. அறிவுடையோரை வடிவுடையோரைச் சம்பத்துடையோரைக் கண்டும் கேட்டும்—உ. வே.

3. ஐம்முதல எனற்பாலது ஐ முதலவென நின்றது விகாரம். இவ் வாறு ஏனையவற்றிற்கும் ஆசிரியர் தொகை கொடாமையின் இஃது உரையாசிரியர் வலிந்துகொண்ட தாம்.

4. பிரிவு, அழுக்காறு, மானமின்மை, இச்சை, சினம் என்ற இவற்ருல் துன்பமுண்மை கூறியவாறு. "ஓம்பி னமைந்தார் பிரிவோம்பல் மற்றவர், நீங்கி னரிதாற் புணர்வு" (குறள் 1155) என்றும், "அறனுக்கம் வேண்டாதா னென்பான் பிறனுக்கம் பேணு தழுக்கறுப் பான்" (குறள் 163) என்றும், "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்ன ருயிர்நீப்பர் மானம் வரின்" (குறள் 969) என்றும், "கண்டு கேட்டுற்று மோந்துண்டுழலு மைங்கருவி,கண்டவின்ப மளவில்லாத் தெரிவரிய சிற்றின்பம்" (திருவாய் 4 : 9 : 10) என்றும், "சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு நிலத்தறைந்தான் கை பிழையாதற்று" (குறள் 307) என்றும் சான்ருேர் கூறுதல் காண்க.

5. நினைப்பதற்கரிதாய் வேறுபட்டுள்ள பலவகைகளை யுடைத்தாம்—உ. வே.

17—23. (ஆதி பௌதிகம்........திறத்த) ஆதி பௌதிகம்— ஆதி பௌதிகம் உண்டாகும்படி சொல்லின் ; சீதம் மாமழை உருப்பு அவிர் வேனில்— குளிரால் வரும் துக்கம், மிகுதியாய[1]வருடத்தால் வரும் நடுக்கம், உட்டினம் விளங்கிய கோடையால் வரும் [2]விதனம் ; இருள்கடி மின்னு—இருளைக் கெடுக்கும் மின்னினால் வரும் விதனம் ; பொருவிறல் அசனி—[3]மிக்கவலியையுடைய இடியால் வரும் விதனம் ; ஒலி கடல் உலகில்— ஒலிக்கடல் சூழ்ந்த உலகில் ; நிலைமிபு உடைய— நிலைபெற்றுடைய ; மன் உயிர்க்கு—பிராணிகளுக்கு ; உறுகண் துன்னி—ஒவ்வொன்றைக் கட்டி வைக்கும் ஒவ்வொன்றைக் கொன்றும் ஒவ்வொன்றை வாதைப்படுத்தியும்; ஆங்கு அருந்தல்—[4]இவ்வண்ணமே இவைகளினால் தாம் நுகர்கை ; ஆதியாய விவரும் திறத்த—[5]இவை ஏழும் முதலாகவுள்ள [6]கெடுத்தற்கரிய வேறுபாட்டை யுடைய விதனமாம் ;

23—28. (ஆதிதைவிகம்........கழிதுன்பம்) [7]ஆதிதைவிகம்— ஆதிதைவிகம் இருக்கும்படி சொல்லின் ; பேதையர் வயின் அக்கருக்

---

1. வருடம்—மழை.
2. “சீதமும் குளிரால்துன்பம் செழும் பனியதனில் துன்பம், போத வந்தேறும் வாதம் பொறுக்கொணா மிக்க துன்பம், ஓதிய கோடைத் தீப்போல் உலைவிலா அழலால்துன்பம், ஏதுதான் காலத்தின்பம் எப்போதும் துன்பமே காண்” என்றும், சிறுபோதுகளால் வரும் துன்பத்தை, “காலையின் மலாதி துன்பம் கடும்பகற் பசியால் துன்பம், ஏலவே இடையிலுள்ள வியாதியான் மிகவுந் துன்பம், மாலையிற் காமவெந்நோய் வந்திடும் உறக்கம் பின்பு, கோலிடில் துன்பமல்லாற் குறுக மற்றொருநா ளுண்டோ” (பெருந். 428, 427) என்றும் பிறரும் கூறுப.
3. வலிதாகிய மிக்க துக்கம் தரும்—உ. வே.
4. வைத்த அவைகளினால் அவ்வண்ணமே நுகர்கை—உ. வே.
5. “ஆதி பௌதிகத்தால் வரும் வேதனை யறையின், மோத மாருத முழங்கிட முறுகிய வேனில், சீதமா மழை செழும்பனி செறியிருள் சழியப், போது மின்புகை பொங்கெரி யாதியாம் பொருளால்” (குறுந். 334) என்றும் பிறரும் கூறினர்.
6. கெடுதற்கரிய—உ. வே.
7. “பிரசவார் குழல் யாவர்க்கும் சிறையுறல் பிறத்தல், வரைவில் பேதைமை யுறனரை திரையுறல் மரித்தல், நிரயமே லெழல் என வரு கினைப்பருந் துயரம், புரையிலாதவர் ஆதிதைவிக மெனப் புகன்றார்” (335) என்பது குறுந்திரட்டு.

குழி அழுங்கல்—[1]மாதாவின் வயிற்றில் அந்தக் கருப்பாசயத்தில் இருக்கும் [2]கருப்பவேதனை; இறும்பூது பிறப்பு—ஆச்சரியமாகிய [3]பிரசவ வேதனை; திரைவரும் தீமை—திரையுறு [4]மூப்பால் வரும் விதனம்; வரைவில் பேதைமை—அளவில்லாத [5]அஞ்ஞானத்தால் வரும் சங்கற்ப

---

1. பெண்டிரின் உதரத்திடத்ததான அந்தக் கருப்பாசயத்தில்-உ. வே.

2. இக்கருப்பவேதனையை மணிவாசகப் பெருமான், தாயின்கருப்பையில் தோன்றிய காலையிற் கிருமிச் செருவும், மூசற்றிங்களில் இருளமைத் துன்பமும், இரண்டாந் திங்களில் ஒருமைத் துன்பமும், மூன்றாந் திங்களில் மதம் பெருகு துன்பமும், நான்காந் திங்களிற் பேரிருட்டுன்பமும், ஐந்தாந் திங்களில் முஞ்சு துன்பமும், ஆறாந் திங்களில் ஊறலர்த் துன்பமும், ஏழாந் திங்களில் புவிதாழ் துன்பமும், எட்டாந் திங்களில் இடநெருக்கத் துன்பமும், ஒன்பதாந் திங்களில் நெருக்கமிகுகித் துன்பமும், பத்தாந் திங்களிற் கடற்போலும் துன்பமும் (திருவா. போற். 14–25) என்று கூறுவர்.

3. பிரசவ வேதனையை "தாயொடு தான்படுந், துக்கசாகரத் துயர்" என்றாராக, குறுந்திரட்டுடையார், "மலைமேனின்று வீழ்வார்போன் மாதம் பத்தில் வாயுவினால், தலைகீழாக விழுமந்தத் தாபத்தோடே வேகத்து, நிலமேல் விழுவதன்முன்னே நெடியோன் மாயக் கால் வீசி, மலைமேவுடலாய் நினைவெல்லா மறக்கு முன்னை வல்வினையால்" (134) என்று கூறுவர். "தோற்றும் பொழுதினீற்றுத் துன்பத்து, யாயுறு துயரமும், யானுறு துயரமும், இறக்கம் பொழுதிலிறைப் பெருந்துன்பமும், நீயலசறிகுநர்யாரே" (திருவிடை. மும். 4 : 16 – 19) என்பர் பட்டினத்தடிகள்.

4. மூப்பால் வரும் துன்பம்: "தொடரநரைத்தங்க முன்புணவாயின, தொழில்கண் மறுத்தொன்று மொன்றியிடாதொரு, சுளிவுதலைக் கொண்டு புன்புலைவாரிகள், தலையொழுகக்கண்டு சிந்தனையோய்வொடு, நடைகெட முற்கொண்ட பெண்டிர் பொருவொரு, நடலைநமக்சென்று வந்தன பேசிட, நலியிருமற் சஞ்சியுண்டி வெருவிழும்" துன்பம் (கோயில். நான். 39) என்பதனாலுமறிக.

5. துன்பமல்லது பிறிதியாதும் நல்காத பேதமையால் விளையுந் துன்பமும் இத்துணையென வரையறுக்கப் படாமையின் வரைவில் பேதைமையென்றார். "பேதைமை யென்பதொன் றியாதெனின் ஏதங்கொண்டு ஊதியம் போகவிடல்" (குறள் 831) என்றும் "ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந், தான்புக் கழுந்தும் அளறு" (குறள் 835) என்றும் திருவள்ளுவர் கூறுதல் காண்க.

வேதனை; [1]மடங்கல் ஆருயிர் தொடங்கின் வெளவல்—இயமன் அரிய உயிரைப் பிணித்துக்கொண்டு போகும்போது உண்டாகும் [2]மரண வேதனை; யாவரும் விழைடாக் கோள்வாய் [3]நிரயத்து வீழ்ந்தனர் எழாஅ வான்கழி துன்பம்—யாவராலும் விரும்பப்படாத கோட்பாட்டையுடைய நரகத்திலே யழுந்தி ஏறுதற் கரிதாகிய மிகப்பெரிய துக்கமாகிய ஆறும் பிறவுமாம்.

29—33. (இனைய.................புரிந்தே) இனைய மாலைய துயர் விளைநகர் இடை— இத்தன்மையவாகிய துக்கக்கிரயங்களை—தன்னிடத்தே கொண்டு பலவேற [4]விசனங்கட்கு இலக்காகிப் பூர்வகன்ம பலத்தைப் புசிப்புக்குரிய சரீரமாகிய நகரிலே; [5]கருங்கைக் கயமைக் களிறு உகைத்து—பெரிய கையையுடைய [6]அஞ்ஞானத்தாலுண்டாகிய கீழ்மையென்னும் யானையின் பிடரியிலே ஏறிச் செலுத்தி; இருப்புலப் பெரும்படை விரிந்து சூழ—பரந்த இந்திரியமாகிய பெரிய [7]தந்திரம்

---

1. மடங்கல்—யமன்; "மடங்கலுண்மை மாயமோவன்றே" (புறம் 363) என்று சான்றோரும் கூறுப. குறித்த வுயிரைக் கோடற்கண் மடக்குதல் ஒருஞான்று மின்மையின் யமனை "மடங்க"லென்றார்.

2. மரண வேதனையை' "சாதலின் இன்னாத தில்லை". (குறள் 230) என்றும் "மரண வேதனை யாவரா லறியலாம் மயக்கியைம் புலனைத் தக், கரணம் யாவையும் கலங்கிட வருந்துயர் கடவுளே யறிகிற்பான்" (குறுந் 188) என்றும் வருவனவற்றாலறிக.

3. நிரயத்துன்பநிலையை, "செறுசொலாள ருறுசினங் கிருகக எற்றியுமீர்த்துங் குற்றங்கொளீஇ ஈர்ந்தும் போழ்ந்தும் எற்றுபு குடைந்தும் வார்ந்துங் குறைத்தும் மதநாய்க்கீந்தும். செக்குரற் பெய்துத் தீநீர் வாக்கியும் பழுக்குடையழுவத் தழுக்கியல் சேற்றுப் பன்னெடுங் கால மழுக்கி யின்னா, வரையில் தண்டத்து மாறாக்கடுந்துயர் நிரயம்' (கோவில் நான்மணி 36) என்று பட்டினத்தடிகள் கூறுதலாலறிக.

4. இத்தன்மைய பலவாகிய துக்கங்களை மாலையாகப் பூண்டு கொண்டு உ. வே.

5. இவ்விசனங்களுக்கு இலக்காகி உ. வே.

6. கயமையைக் களிறாக உருவகஞ் செய்தலின், அதற்கேற்பக் கருங்கைக் களிறென விசேடித்தார். கருங்கையென்றதனால் பாவமே செய்யப்படுவது குறித்தவாறு.

7. குணவீனமாகிய யானைமேலே ஏறிக்கொண்டு உ. வே.

8. தந்திரம்—சேனை. இந்திரியங்களைப் புலம் என்றார், புலந்தோறும் தங்கிப் போகம் நுகர்வித்தலின். தானை சூழ்வரச் செல்லும் வேந்தன் இடந்தோறும் நின்று காண்பன கண்டு செய்வனசெய்தல் போலப்

விரிந்து சூழ்ந்துவர; திருந்தா[2]நாற்கதிப் பவனி உலாய்—ஒரு காலத்தும் திருத்த வாராத உற்பிசம் அண்டசம், சராயுசம், சுவேதசம் என்று சொல்லப்படா நின்ற நால்வகைப் பிறப்பிலே பவனியாகி; [3]ஆர்த்தவிழ் திறம்—[4]ஒருடலைக் கூடியும் பின்பு வேறோருடலைக் கூடுதற்குப் பிரிந்தும் செல்லும் வகையினைச் [5]சொல்ல; புரிந்து போற்றமதி—அவையிற்றை விரும்பிக் கேட்பாயாக எ-று.

பிற, மதி—அசை நிலை.

பாசபந்தம் முடிந்தது.

---

புலந்தோறும் இவை அறிவன அறிந்து செய்வன செய்தலும் உளவாதல் பெறப்படும். "விரவு மொழிக்கட்டூர் வேண்டுவழிக் கொளீஇ (அகம். 212) என்பதனால் தானை சூழ்தரச் செல்லும் வேந்தன் புலந்தோறும் தங்குதல் இல்பாதல் காண்க.

1. மிகுந்த சூழ்தர உ. வே.

2. நகரியிலேயுலாவரும் வேந்தற்கு நான்கு தெருக்கள் போல உயிராகிய வேந்தற்கு நாற்கதி கூறினர்; அரசவீதி போலாது மாசுநிறைந்த வீதிகளென்பார் "திருந்தா நாற்கதி" என்றார். சுயவன் அரசனுகியவிடத்துத் தெருக்களில் திருத்தமேது?

3. எடுத்தவுடற் கட்டவிழ்த்து வேறேயுடலோடு பிணித்துக் கொண்டுழலும் திறத்தைப் பட்டினத்தடிகள், "எனைப்பல யோனியும் நினைப்பரும் பேதத் தியாவரும யாவையும் எனக்குத் தனித் தனித் தாயாராகியுந் தந்தையராகியும், வந்திலாதவரில்லை யானவர், தந்தையராகியுந் தாயராகியும, வந்திராததுமில்லை மூந்த, பிறவா நிலனுமில்லை யவ்வயின் இறவா நிலனுமில்லை பிறந்திலென்னைத் தின்று வுயிர்களுமில்லை யானவை தம்மைத் தின்று தொழிந்தது மில்லை யனைத்தே, காலமுஞ் சென்றது யானிதன் மேலினி, இளைக் குமாறிலனே" (கழுமல மும்ம 7) என்று விளக்க வுரைப்பர். "குடம்பை தனித் தொழியப் புட் பறந்தற்றே யுடம் போடுயி ரிடை நட்பு" (குறள் 338) என்பதும் இதனை இனிது விளக்கி நிற்கு மாறறிக.

4. ஒருடலைவிட்டு ஒருடலையெடுத்துச் செல்லும் வேறுபாட்டைச் சொல்லுவன் உ. வே. இஃது அடுத்துவரும் திருவகவலிற் கூறப் படுகிறது.

5. சொல்ல என்பது சொல்லெச்சம்.

## IV. தேகாந்தரம்

### அகவல் 27

### ஆர்த்தவிழ் திறம்

இருந்துயர் கெழீஇ வருந்தி யாப்புற்ற
முற்பய னீண்டுத் துய்த்தனர் கழிப்பின்
கருங்கய [1]லிரியப் பெரும்பகடு துரந்தாங்
குழவ ராக்கிய விளைவயற் [2]செந்நெல்
பிற்பயன் றந்தாங் [3]கிச்செய லுதவ
எய்திய குகையின் மையறப் படர்தல்
இருங்கழன் மள்ளர் பதம்படர் திருந்தடி
சாபவான் [4]புழுவிற் காழக மடியக்
கடிபடு புட்டக [5]மடிவிடு புனைதல்
கண்படைக் [6]கனவிற் கடிமதில் பாய்ந்த
தும்பி வன்பிடர்த் தோன்றன் மேலதை
உள்ளமு நுழையா [7]வூங்குங் கீழதை
ஏழ்தல மிறந்த கீழும் புடையதை
நேமி மால்வரைப் புறனுந் தாடோய்
தடக்கை மாவீழ் மணியினு மடுக்கிய
சிறுநணித் தானும் பெருஞ் சேய்த்தானும்

---

1. கிழிய—பா. வே.
2. சாலி—பா. வே.
3. கிச்செயிலுதவ —பா. வே.
4. புழுக்—பா. வே.
5. வடிவொடு—பா. வே.
6. யொன்னார்கடிமதில்—பா. வே.
7. வாங்குங்—பா. வே.

வினைமாண் டுப்பின் மனமாண் டேரின்
துடிபல வகுத்த [1]விசையிற் சேறல்
கார்முகங் கான்ற பூமுக விசிகம்
உள்ளியது [2]கிழித்தலின் பள்ளி நீங்கி
ஒருபெருந் தமியன் விரிபுல னுடுத்த
பேரத் தாணிப் பெயரினுந் துணையின்
றறிவருந் துரியத் தல்கினுந் தெரிபொன்
றிசையா தேகி யாங்கு வசைதபு
கடிகலை முதறா வந்த
படியென வறிநெடி தொடிவுட னுகவே.

[3]இது தேகி தேகங்களை "ஆர்த்தவிழ்திறம்" (ஞான. 26 : 33) எங்ஙனே யென்ன அவ்வியல்பு கூறியது.

1—2. உரை: (இருந்துயர்..............கழிப்பின்) இருந்துயர் கெழீஇ வருந்தி—[4]இங்ஙனம சொல்லப்பட்ட மிக்க துக்கத [5]திரயங் களுடனே கெழுமி வருந்தி; யாப்புற்ற முற்பயன் ஈண்டுத் துய்த்தனர் கழிப்பின்—ஆர்ச்சிக்கப்பட்ட பூருவகன்ம பலத்தை இத்தேகத்திலே நின்று [6]புசித்துக் கழித்த பின்பு;

3—6. (கருங்கயல்...........படர்தல்) கருங்கயல் இரியப் பெரும் பகடு தூர்ந்து—பெரிய கயல்மீன்க ளெல்லாம [7]நீங்கிப போக மகத்

1. விடையிற் சேறலின்—பா. வே.

2. கிழித்தல்—பா. வே.

3. இது தேகாந்தரம் சொல்லியது—பா. வே.

4. இப்பகுதியுரை சொற்கள் தடுமாறிச் சிதைந்து காணப்படுகிறது.

5. திரசயங்களுடனே கெழுமிச் செல்கை செய்தே—உ. வே.

6. புசித்தற்ற பின்பு—உ. வே.

7. கெட்டுப் போக—உ. வே.

தாகிய [1]கடாவை ஏரிற் பூட்டிச் செலுத்தி ; ஆங்கு [2]உழவர் ஆக்கிய விளைவயல்—அவ்விடத்துப் [3]பயிர் செய்வோராலே உழுது விளைதற்குப் பண்படுத்தப்பட்ட [4]விளைவயலில் ; செந்நெல் பிற்பயன் தந்தாங்கு— செந்நெற்பயிர் பின்பு புசிக்கைக்குரிய பயனை விளைத்தாற்போல ; [5]இச்செயல் உதவ—இத் தேகத்திலே [6]நின்ற பூர்வகன்ம பலத்தைப் புசிக்குமிடத்து ஆர்ச்சித்த [7]கன்மம் தன்பலனை அனுபவிக்கைக்குப்

---

1. கடாவைப் பூட்டி—உ. வே.

2. முன்னே விளைந்த விளைவை யுண்டுகொண்டே பின்னே யுண்டற் கேதுவாக உழவர் நெல்விளைவினை யுண்டுபண்ணுகின்றனரென் றற்கு, "உழவர் ஆக்கிய விளைவயல் செந்நெற பிற்பயன் தந்தாங்கு" என்றார். உழவரை உயிர்க்கிழவனாகவும், விளைவயலை யுடம்பாகவும் செந்நெற்பயனை வினைப்பயனாகவும் கொள்க. செவ்வேயாக்கிய வழி நெற்பயனை நன்குவிளைவுக்கும் வயலென்பார், "விளைவயல்" என்றார் ; இது வினைத்தொகை. "எளவியாக்கம்" என்புழி ஆக்கத்துக்குச் சேனாவரையர் கூறியதுபோல தீது நீக்கிச் செம்மை செய்தலென்றே கொள்க.

3. பயிர்செய்வோர் விளைக்கப்பட்ட—உ. வே.

4. விளைவயலில் உண்டாகிய—உ. வே.

5. இதனாலே உயிர்தான் நின்ற உடலினீங்கி வேறு உடலெடுத்தற்குக் காரணம் கூறியவாறுமிற்று. நின்ற வுடம்பின் நீக்கப், பக்குவப் பட்ட கன்மபலத்தை நுகர்தற்குரிய வேற்றுடம்பினை நல்குவதற்கு ஏது இவ்வுடம்பிற் செய்துகொண்ட வினையாதலின், "இச்செயல் உதவ" என்றார். வினை சடமாதலின், அஃது உடம்பு நலகா தாயினும், வேறு உடம்பு வருவதற்கு ஏதுவாதலின் அதனையே கருத்தாவாக்கிக் கூறினர். "பல்லாவுளுய்த்து விடினும் குழக்கன்று வல்லதாம் தாய் நாடிக்கோடலைத்—தொல்லைப், பழவினையுமன்ன தகைத்தே தான் செய்த. கிழவனை நாடிக் கொளற்கு (நாலடி 101) என்பது வினையையே சேதனம்போலப் பயன் நல்கும் கருத்தா வாகக் கருதிக் கூறும் பிறசமயக்கொள்கை.

6. நின்று ஆர்ச்சித்த—உ. வே.

7. கன்மபலனை—உ. வே.

[3]பக்குவப்பட; எய்திய [4]குகையின் மையறப் படர்தல்—போகரும் தேகத்தைக் குற்றமறப் [5]பற்றும் இயல்பு இருக்கும்படி சொல்லின்;

7—11. (இருங்கழல்...........தோன்றல்) [6]இருங்கழல் மன்னர் பசும் படர் திருந்தடி—பெரிய வீரக்கழலையுடைய வீரபுருடர் வழியிலே [7]செல்லுமிடத்துத் திருந்த அடியிட்டு அடிபெயர்த்து வைத்தாற் போலவும்; சாபவான் புழுவின்—வெள்ளிய [1]வில்லூன்றிப் புழுப் போலவும்; காழகம் மடிய—உடுத்த [2]கூறை பீறிக் கெட்டமையால் பெயர்த்து; [3]கடிபடு புட்டகம் மடி விடுபு புனைதல்—[4]புதியதோர் கூறையை [5]மடிவைத்துடுப்பது போலவும்; கண்படை—நித்திரையிலே;

---

4. பொசிக்கைக்குப் பக்குவப்பட்ட தேகத்தை—உ. வே.
5. குகை—உடம்பு "கருமருவு குகையனைய காயம்" (தாயு. 32) என்று பிற்காலத்தான்றோரும் கூறுதல் காண்க.
6. எடுக்கும் இயல்பைச் சொல்லின்—உ. வே.
7. மன்னர் திருந்தடி, வினைகள் இன்பமும் துன்பமும் பயந்து மாறி மாறிப் பெருகுதற்கும் சாபவான் புழு இடையறவின்றித் தொடர்புற்றுவருதற்கும், புட்டகம் மடிவிடுபு புனைதல் உடம்பின் நீங்குங்கால் உயிரின்பாற் செறிந்திருத்தற்கும், கனாக்காண்டல் வினை நிகழ்ச்சியின் விரைவுடைமைக்கும் உவமைகளாகும்; இங்கே கூறப்படும் கருத்துக்கள் சிவஞானபோதத்தும் சுப்பிரபேதத்தும் உள்ளன.
8. செல்லுமிற திருந்திய அடியிட்டு—உ. வே.
1. "பூதத்தாலுண்டாகிய தூலவுடலை விட்டுச் சாணளப்பான் புழுப் போல ஆன்மா அக்கணமே வேறோருடலைக் கன்மத்துக்கீடாகப் பூமியிற் பற்றினும் பற்றும்" என்று கூறுவர் மறைஞான தேசிகர். வில்லூன்றிப் புழுவைச சாணளப்பான் புழு என்றும் கூறுவர்.
2. பீறிய கூறையைப் பிரித்து—உ. வே.
3. "பழம்படவையைப் போட்டு நவமான வஸ்திரத்தை யெடுக்குமாறு போல மீளவும் கன்மத்துக்கீடாகப் புகரிறொருதேகத்தை யெடாநிற்கும்" என்பர் மறைஞான தேசிகர் (சிவ சித். 237).
4. மடிவிடுபு புனைதலைப் பலவினைகளின் பயனை ஒருங்குதொடர நுகர்தற்கும், கனவுக்காட்சி வினைப்பயனை நுகர்ந்து கழிதற்கும் என்றும் கூறுப.
5. மடிவிட்டுடுப்பானைப் போலவும்—உ. வே.

கடிமதில் பாய்ந்த தும்பி வன்பிடர் தோன்றல் கனவின்—சத்துருக்களது காவலை யுடைத்தாகிய மதிலையிடித்த யானையின் வலிய கழுத்தின் மேல் இருந்ததாகக் கனவு கண்டாற் போலவும்;

11—18. (மேலவை...............சேறல்) மேலதை [1]உள்ளமும் நுழையா ஊங்கும்—மேலெல்லாவற்றுக்கும் மேலாய மனத்தாலும் நினைத்தற்கரிய மேலிடத்தும்; [2]கீழதை ஏழ்தலம் இறந்த கீழும்—கீழேழு பாதலங்கட்கும் அப்புறமான கீழிடத்தும்; புடையதை [3]நேமிமால் வரைப்புறனும்-பக்கத்தே [4]சக்கரவாளகிரிக்கு அப்பாலும்;

---

1. உள்ளத்தாற் செல்லலாகா இடமின்மையின், "உள்ளமும் நுழையா" என்றார். மேலிடமென்றது, மேலேழ் உலகங்களையும். அவையாவன புவ லோகம், மக லோகம், சன லோகம், தவ லோகம், சத்திய லோகம், வைகுந்தம், உருத்திர லோகம் என்பன. உள்ளமு நுழைய வூங்கும் என்றது, "அண்ட மாரிரு ளூடு கடந்தும்பர்" (தனி குறுந்) என்ற நாவரசர் திருவாக்கினை நினைப்பிக்கின்றது.

2. கீழதை ஏழ்தலம், கீழ் பாலேழும் மேற் பாலேழும் நடுவேழுமாக மூக்கூற்று எவ்வேழு நரகங்களுமாகும். இவற்றின் விரிவை மிருகேந்திரம் (அத்வப் பிரகரணம்) கூறுவது கொண்டறிக. "அதா அன்று, கீழது நீரகம் புகினு மேலது விசும்பின்பிடர்த்தலையறினும் புடையது, நேமிமால் வரைக்கப் புறம்புகினும்" என்ற ஆசிரிய மாலையடிகளை ஒத்திருத்தல் காண்க.

3. இந்நாவலந்தீவைச் சூழ்ந்து அறுவகைத் தீவுகளும் உவர்க்கடல் முதல் தூநீர்க் கடலீறாக எழுவகைக் கடலுமுண்டென்றும், அத் தூநீர்க் கடற்கப்புறத்தே பொன்னிலமுண்டென்றும், அதனைச் சூழ்ந்து "உலோகாலோகமென்னும் சக்கரவாளகிரி பதினாயிரம் யோசனைப் பரப்புடைத்தாயிருக்கும்" என்றும், "அந்த மலையின் புறத்தைச் சூழ்ந்து இருள்மயமாய்த் துன்னிய நிலம்" உண்டென்றும் அதனைச் சூழ்ந்தது பெரும்புறக் கடலென்றும், அதனைச் சூழ அண்டச் சுவருளதென்றும் கூறுப. இவற்றின் விரிவைச் சிவஞானபாடியத்தும் மிருகேந்திரத்தும் காண்க.

4. சக்கரவாளகிரி திக்குப்பாலகர் இருக்கும் இடமாகிய மலை. இதனை மிருகேந்திரம், "லோகபாலா ஸ்திதா யத்ர லோகாலோகஸ் ஸ பர்வத: । வக்ஷ்யாமி தாவதந் ஸ்வஸ்வபுரவ்யூஹாவிதீந் ॥" (xiii. 44) என்று கூறுவது காண்க.

தாள்தோய் தடக்கை மாவீழ் மணியினும்—முழந்தாளிலே தோயும் படியான நெடிய கையிலே [1] தாங்கிய அழகிய விருப்பமுள்ள மாணிக்கத்தினும்; அடுக்கிய சிறு நணித்தானும்—[2] அடுத்த அண்மையினுங் காட்டில் [3] அண்மையினும்; பெருஞ்சேய்த்தானும்—முன்பு சொன்ன இடங்களின் மிக்க பெருந்தூரத்திலும்; மாண்வினை துப்பின் மனமாண்தேரின்—[4] மாட்சிமையுடைய வினையாகிய வலிபினையுடைய மனமென்னும் அழகிய தேரிலே நினைவு ஏறி; துடி பல வகுத்த விசையின் சேறல்—[5] துடியென்னும் காலத்தைப் பல கூறிட்ட கடுமையிலே [6] பொருள் கெடாது சென்றாற் போலவும்;

19—20. (கார்முகம்........ ........கிழித்தலின்) கார்முகம் கான்ற பூமுக விசிகம்—வில்லினின்றும் விடுக்கப்பட்ட [7] கூரிய முகத்தை

---

1. தாங்கிய என்னும் இச்சொல் சில ஏடுகளில் இல்லை.

2. அணித்தாகச் செறிந்த அண்மையினும்; செறிக்கப்பட்ட அண்மையினும்; அண்மையிலும் அண்மையிலும் உ. வே.

3. "துப்பெதிர்ந்தோர்க்கே யுள்ளாச் சேய்மையன், நட்பெதிர்ந்தோர்க்கேயங்கை நண்மையன்" (புறம் 380) என்று சான்றோரும் கூறுப.

4. மாட்சிமைப்பட்டதாகிய மகத்தான வலிமையுடைத்தாகிய மனோரதத்திலே—உ. வே.

5. ஒரு துடியோசையைப் பல கூறிட்ட கடுமையிலே நினைவு பொருள் கெடாது—உ. வே.

6. தேர்மிகமிக விரைந்து கடுகுமாயின், தேர்மீது செல்லும் பொருள் விகாரமடைதல் ஒருதலையாதலின், "பொருள்கெடாது" என்று உரைப்பது குறிக்கத்தக்கது. உயிர் பிறப்பிறப்பாகிய சுழலிலகப்பட்டு மிக விரைந்து சுற்றுங்கால், அதனைப்பற்றியிருக்கும் வினை கெடாதிருத்தற்கு இஃது உவமம்.

7. புகர் முகத்தையுடைய—உ. வே. "பூவாள்" (புறம். 224) என்றாற் போலப் பூ ஈண்டுக் கூர்மை குறித்தது.

[1]இப்படிச் சொல்லிற்று, ஆன்மா ஓர் தேகத்தைவிட்டு மற்றோர் தேகத்தையெடுக்கும் விதம்;

21—26. (வசைதபு........உகவே) வசைதபு [2]கடிகலை முதல்தா வந்தபடி என—குற்றமற்ற விளக்கமுடைய கலைமுதலாகவுள்ள தத்துவங்கள் பக்குவப்பட்ட ஜனமம் புசித்தற்கு [3]ஆன்மா ஒரு தேகத்தை விட்டு மற்றொரு தேகத்தையெடுத்தலாம் என்று; நெடிது உடன் [4]ஒடிவு உக அறி—[5]உன்னை நெடிதாக உடன்கூடியுள்ள தோட மெல்லாம் கெட அறிவாயாக எ-று.

ஐ, ஏ அசை.

---

1. துரியாவத்தையில் நின்ற ஆன்மா உறக்கத்தினின்றும் நீங்கிப் பரந்த இந்திரியங்களாலே போகம்புசிக்கும் சாக்கிராவத்தையிலே வந்தாலும் செப்பறைப் பிரதி என்று கூறுகிறது.

இந்தப் போககுவரவு ஆன்மாவுக்குள்ளனவல்ல என்றொரு தொடர் சில பிரதிகளில் துகளே காணப்படுகிறது. இப்படிச் சொல்லிற்று தேகதேகாந்தத்தை இதுதான் ஆன்மாவுக்குப் போக்குவரவுடைத் தாயதல்ல—உ. வே.

2. கடியென்னும் உரிச்சொல் விளக்கப்பொருட்டு; "கடி யென்கிளவி வரைவே கூர்மை காப்பே புதுமை, விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே, அச்ச முனறேற்று ஆயீ ரைந்தும், மெய்ப்படத் தோன்றும் பொருட்டாகுமமே" (தொல். சொல். உரி 85) என்பது தொல் காப்பியம். கலாதத்துவம், ஆன்மாவை மலமறைப்பினின்றும் சிறிது நீக்கிச் செயற்படுத்தும் விளக்கமுடைமைபற்றி, அதனைக் "கடிகலை" யென்றார்; "அயர்விலாக் கலையின தோன்றி ஆணவம் ஒதுக்கிச் சித்தின், செயல்புரி கிரியா சத்தி தெரிவிக்கும்" (சிவ. சித். 145) என்று அருணந்தி சிவனாரும் கூறுவர். சிவமுதல் நிலமீறாகவுள்ள தத்துவம் முப்பத்தாறனுள், சிவ முதலிய சுத்த தத்துவ மைந்தாற் பிணிப்புறாது கலைமுதல் நிலமீறாயவற்றோடே அவனை யெய்துதல்பற்றி, "கலை முதல்தா" என்றார். வினவரும் மிடங்களிலும் இவ்வாறே தெரிந்துகொள்க.

3. ஈடானபடி தேகமானபடி—உ. வே.

4. ஒடிதல் செவ்விதன்மையின் அவ்வியைபுபற்றிக் குற்றத்தை "ஒடிவு" என்றார்.

5. உன்னோடு—உ. வே.

## அகவல் 28

### அச்சுமாறிப் பிறந்தல்

இலங்கு குங்கும மார்பரும் வலம்புரி
ஒருமணி யன்ன திருநல மாதரும்
முயக்கிடை யறியா மயக்கின் வயக்குறு
துப்புருக் கன்ன பழனத் தாஅ
முத்துருக் கன்ன வித்தார் காலை
[1]யாப்போ னின்றெனி னீக்குவ ருறையின்
[அஃதான்று
முயங்குந் தோறு மூயங்குந் தோறும்
பிறங்கடை பெரிதே யன்றே யாகம்
ஆருயி ராயின் வீவோ வின்றே
தன்னை யன்னை தம்மிடைப் பகுப்பிற்
பின்னர்க் கான்முளை [2]மன் னுத லிலரே
கனங்குழை மாதர் [3]கணங்கொள் பீண்டி
அனங்க னொஅ மனங்குழை பிரங்க
இற்றோர்க் காண்டிகு முற்றவுங் காண்டிகும்
இவண மன்றெனி [4]னதீதா நாகதம்

---

1. யாப்போ னின்றே னீக்குவரு ரையின் —பா. வே.

2. மன்னு நற் கிலரே —பா. வே.

3. மனங்கொள வீண்டி: கணங்கொடீண்டி; கணங்கொண்டீண்டி பா. வே.

4. பூதபவிஷ்ய வர்த்தமானமென்ற மூன்றனுள், பூதபவிஷ்யங்களை "அதீதா நாகதம்" என்று கூறுகின்றார். இவ்வாறே சிவாக்கிர யோகிகளும், யோகக்காட்சியைப்பற்றிக் கூறுமிடத்து, பூதபவிஷ்ய மென்னுது, அதீதா நாகதமெனறே கூறுவார்; "யோகிஜ்ஞானம் நாம அதீதாநாகத வர்த்தமான சாக்ஷாத்கார: (யோகிஜ்ஞானம் நாம அதீதாநாகத வர்த்தமான ஸாக்ஷாத்கார:) என்பது காண்க. (சிவாக்கிரபாடியம். பக். 109).

ஐயமின் றுணர்ந்தோர் மையறு பனுவலின்
வருபிறப்புணர்ந்த மதியோர்த்தோன்றும்
மூதணடு விறுதி யிளமை மூப்பின்
ஒழிவற நிறைந்தோ னுதழிதந் [1]தொடுங்கும்
[2]ஆதி யின்மையின் பூத மாநகர்
ஈரிரண் டெய்தித் தீதற வொரீஇக்
கோபுரங் கூட மாட மாளிகை
விளிம்பு பளிங்கார்த்த பசும்பொன் வேதிகை
அரமிய முதல விரவும் பெயர் பெறீஇக்
கலங்கியுங் கலங்காக் [3]காரணத் திலங்கியும்
பாடல் சான்ற பல்புகழ் நிறீஇ
வாடாத் துப்பிற் கோட லாதி
அருளா பரண னறத்தின் வேலி
[4]பொருண்மொழி யோகங் கிரியையிற் புணர்த்த
அருண்மொழி திருமொழி போலவும்
என்று நிலீஇயர் நன்றுமன் பெரிதே.

இஃது அசேதனப் பிரவிருத்தி சொல்லுகிற சமயங்களை நிராகரித்துத் [5]தேகதேகாந்தம் ஆன்மாவுக்கே எனச் சாதித்தது.

---

1. றெடுங்கும் வீடில்—பா. வே.
2. ஆதியின் மையின்—பா. வே.
3. கரணத் திலங்கியும்—பா. வே.
4. இவ்வடி அச்சுப்பிரதியில் இல்லை.
5. ஒரு தேகத்தை விடுத்து மற்றொரு தேகத்தை யெடுத்தல் ஆன்மாவுக்கே யுண்டென்று கூறியது—பா. வே.

1—6. உரை :—(இலங்கு........உறையின்) [1]குங்குமம் இலங்கு மார்பரும்—குங்குமம் விளங்கும் மார்பையுடைய புருடரும்; [2]வலம் புரி ஒரு மணியன்ன திருநல மாதரும்—வலம்புரிச்சங்கிலே தோன்றிய [3]தனிமுத்தையொத்த செல்வத்தையும் அழகையுமுடைய மாதரும்; [4]முயக்கு இடைஅறியா மயக்கின்—கூடுகிற பருவத்தே இரண்டு சரீரமென்னுமிது தோற்றாத [5]போகமயக்கத்திலே; வயக்குறு [6]துப்பு உருக்கன்ன பழனத்து—ஒளிபொருந்திய பவளத்தையுருக்கினாற்

1. ஆடவரும் மார்பில் குங்குமமணிவது மரபு; "குங்குமக் குழங்கல் மாலை, மல்லுப் பூத்தகன்ற மார்பீர்" (சீவக. 743)என்று பிறரும் கூறுதல் காண்க.

2. நற்குடியிற் பிறந்த குலமகளிர் என்றற்கு, "வலம்புரி பொருமணி யன்ன, மாதர்" என்றார்: விசயை சீவகனைப்பெற்றது கூறுவார், "தேவரும் வலம்புரியுலகம விற்கும் மாமணி யீன்றதென்ன, இலங் கிழை சிறுவனறனைப் பயந்து" (சீவக. 386) என்பது காண்க.

3. ஒப்பற்ற மணிபோலும் குடிப்பிறப்பையும் அழகையுமுடைய மாதர் உ. வே.

4. முயக்கிடையறியா மயக்கத்தை "இன்று நான் இவளாம் பகுதிப் பொற்பு ஆர அறிவார்" (8) என்ற கோவையார் கருத்தை விளக் கலுற்ற ஆசிரியர் பேராசியர், "என் நெஞ்சம இவள் கண்ணே யொடுங்க யானெனன்பதோர் தன்மை காணுதொழிய இருவருள்ளங் களும் ஒருவே மாமாறு காப்ப ஒருவேமாகிய ஏகாந்தத்தின்கண் பிறந்த புணர்ச்சிப் பேரின்ப வெள்ளம" ஒருவராலுமறியப்படாத தென்றதனாலறிக. இச்சிற்றின்ப நுகர்ச்சியியல்பும் இனிது தோன் றப் பேரினப நிலையைக் கூறும இராமலிங்க அடிகள், "மனை யணைந்து மலரணைமேல் எனையணைந்த போது, மணவாளர் வடி வென்றும் எனது வடிவென்றும், தனை நினைந்து பிரித்தறிந்த தில்லைபடி யெனைத்தான், சற்றுமறியேனெனில் யான் மற்றறிவ தென்னே" (அனுபவ மாலை 16) என்று திருவருட்பாவில் உரைத் திருத்தல் காண்க.

5. சுரதமயக்கத்திலே—உ. வே.

6. சுரோணிதம் செந்நிறத்ததென்றற்கு, "துப்புருக்கன்ன பழனத்து" என்றார்; அருணகிரியாரும், அதன் நிறகுறித்தக் "குருதியிலே சுக்கிலமது கூடிக் குவலயம வானப் பொருகாலாய் உடலெழும்" (திருப்புகழ் 1086) என்று கூறுவர்.

போன்ற [1]சுரோணிதப் பிரதேசத்திலே; ஆறு முத்து உருக்கன்ன வித்து ஆர் காலை—நிறைந்த முத்தையுருக்கினாற்போன்ற [2]சுக்கிலமென்னும் [3]வித்துப் பொருந்துங்காலத்து; [4]யாப்போன் இன்றெனின்—அவ்விடத்தே போகப்புசிக்கப் பக்குவப்பட்ட ஆன்மா பந்தியாதாயின்; உறையின் நீக்குவர்—[5]சுத்திபண்ணும் நீரோடே கழிப்பர்;

6—9. (அஃதான்று..... இன்றே) அஃது அன்று—அற்றன்று, சுக்கிலசுரோணிதமே பிள்ளையாமென்னில்; முயங்குந்தோறும் முயங்குந்தோறும் பிறங்கடை பெரிது—போகஞ்செய்யுந்தோறும் போகஞ்செய்யுந்தோறும் பிள்ளைகள் பலர் உண்டாக வேண்டும்; [6]அன்று—அங்ஙனமன்று; [7]ஆகமே ஆருயிராயின்—சரீரமே உயிராமென்னின்; வீவோ இன்று—மரணமில்லையாகவேண்டும்;

---

1. சுரோணிதம் நிறைந்த நிலத்திலே; சுரோணிதமுடைய நிலத்திலே —உ. வே.
2. சுக்கிலம் வெண்ணிறத்ததாகலால் அதன் துளியை, "முத்துருக்க கன்னவித்து" என்றார்; திருத்தக்கதேவரும், "தாமரைவாய் உற வீழ்ந்ததோர் ஒண்மணிபோன்று" (சீவக 218) என்றாராக, நச்சினார்க்கினியார் மணியை முத்தென்று கொண்டு, "முத்துப்போன்று" என்றார். அருணகிரியார், சுக்கிலத்துளிக்குத் தாமரையிலையிற்றங்கிய நீர்த்துளியை யுவமமாக நிறுத்தி, "சுக்கிலஞ் சுரோணிதத்தி லூற்று வளினத்திலப்பு வெரைத்த முற்றி" (திருப்புகழ் 565) என்றனர்.
3. வித்தை வித்துங்காலத்து—உ. வே.
4. சுக்கிலம் பொருந்திப் பெருகிய வழியும் பந்திப்போன் இன்றி அமையாமையை அருணகிரியார், "பனிபோல் மதம் வந்துட் பெருகிடவே விதியானவன் அருள்மேவி "(புகழ். 656) என யாப் புறுக்கும் அருளைக் கூறுமாற்றால் உரைப்பது காண்க.
5. உரையின் என்று பாடங்கொண்ட தற்சேற்ப, சொல்லுமிடத்துச் சுத்திபண்ணும் நீரோடேகழிப்பர் என்ற உரை சில பிரதிகளில் காணப்படுகிறது.
6. அற்றே—அன்று+ஏ எனப் பிரித்து ஏகாரத்தை ஆகம் என்பதனோடு கூட்டி உரை கூறப்படுகிறது.
7. அங்ஙனமன்றாயினும் சுக்கில சுரோணிதக் கலப்பு ஐம்பூதங்களின் பரிணமைக் கூட்டத்தாற் பெருகுதலாம், பெருகுமவ்வுடலே உயிர் என்னாதலின், ஆகமே யாருயிராயின் என்றார்.

இஃது உலகாயதமத நிராகரணம் பண்ணியது.

10—11. (தன்னை............இலரே) தன்னை அன்னை தம்மிடை பகுப்பின்—பிதாமாதாக்கள் உயிரிலே [1]பகுந்தது உயிர் என்று சொல்லின்; பின்னர் கான்முளை மன்னுதல் இலர்—ஒரு பிள்ளைக்குப் பின்பு மற்றொரு பிள்ளை [2]யுண்டாதல் இல்லையாம்.

இது [3]மீமாஞ்சைமத நிராகரணம் பண்ணியது.

12—14. (கனங்குழை........காண்டிகும்) கனங்குழை மாதர் கணம் கொள்பு ஈண்டி—கனவிய மகரக் குழையையுடைய பெண்டுகளெல்லாம் கூட்டமாகக் கூடி; [4]அனங்கன் எனுஅ மனம் குழைபு இரங்க—காமதேவனே என்று மனமழிந்து கூப்பிட்டு அலற; இறந்தோர்க் காண்டிகும்—மரித்தோரையும் [5]காணாநின்றாய்; [6]உற்றவும் காண்டிகும்—[7]பிறந்த பிள்ளை நாடோறும் வளரவும் காணாநின்றாய்;

---

1. புகுந்தது உயிர்—உ. வே. பகுந்தது—பகுப்புண்டு வந்தது..

2. உண்டாதற்கு இவர்கள் உயிரோடிருத்தல் கூடாதே—உ. வே.

3. பிரகிருதி புருடன் என்னும் இவற்றின் போக்ய போக்திரு இலக்கணமான சாமானிய சம்பந்தமே உலகம் தோன்றுதற்குக் காரணமென்று மீமாஞ்சகர் கூறுவாரெனப் போககாரிகையுடையாரும் (9, 10) கூறுகின்றார்.

4. "கேள்விகள் துறைபோய், வடிகொள் கண்ணியர் மனங்குழைந் தனங்கனென்றிரங்கக், கொடையுங் கோலமுங் குழகுந்தம்மழகுங் கண்டேத்த, விடையிற் செல்வழி விளியினும் விளியும்" (2757) என்ற சீவகசிந்தாமணிச் செய்யுளை நினைப்பிப்பது காண்க.

5. காணாநின்றேம்—உ. வே.

6. இங்ஙனம் பிறந்து வளர்ந்து காமன்போற் காரிகையார் மருள வளர்ந்திறத்தலேயன்றி, கருவிலும், பிறந்தவுடனும் இறப்பது காண்கின்றேம் என்பது தோன்ற, "உற்றவும் காண்டிகும்" என்றதற்கேற்பவும் இது நிற்குமாறு காண்க.

7. பிறந்த பிள்ளை நாளாவட்டமும் வளர்தலைக் காண்கின்றேம்—உ.வே.

15—20. (இவணம்........இன்மையின்) இவணம் அன்று எனின்—இவ்வண்ணம் தேகத்துக்கு ஆன்மாவென்று கருத்தா ஒருவன் இல்லையென்பாயாகில்; அதீதாநாகதம் ஐயமின்று உணர்ந்தோர்—[1]அதீத அநாகதமான பூதபவிஷியங்களை ஐயமற அறிந்து சொல்லுவோராலும்; மையறு பனுவலின் வருபிறப்புணர்ந்த மதியோர்—குற்றமற்ற சாத்திரங்களாலே இனி யெடுக்கும் சரீரங்களை அறிந்து சொல்லுவோராலும்; தோன்றப்—[2]ஆன்மாவாகிய கருத்தா ஒருவன் உளன் என்று அறியவருமல்லவோ;

[3]முதல் நடு இறுதி இளமை மூப்பு இல்—முதலும் நடுவும் இறுதியும் இளமையும் மூப்புமில்லாத; [4]ஒழிவற நிறைந்தோன்—அணுப்புதைக்கவும் இடமின்றி எங்கும் நிறைந்த பரமசிவன்; உழி

---

1. அதீதம்—அளவுகடந்த (இறப்பு); அநாகதம்—இதுவரையில் ஏற்பட்டிராத (எதிர்காலம்); பூத பவிஷியம்—இறந்தகால எதிர்காலங்கள். இறப்பு எதிர்வு நிகழ்வு என்ற முக்காலத்தையும் வடநூலார் முறையே பூத பவிஷிய வர்த்தமானமென்பர்.

2. ஆன்மாவாகிய கருத்தா என்ற தொடர் சில பிரதிகளில் இல்லை.

3. இதுகாறும் தேகத்தின் வேறாக ஆன்மாவுண்டெனச் சாதித்தவர், ஆன்மா போக்குவரவுபுரிதற்குத் தேகம் வேண்டியிருத்தல்போல முதல்வனுக்கும் தேகம் வேண்டுமென்றெழும் கடாவை ஆசங்கித்து அவன் தேகமின்றியே யாவும் செய்வனெனச் சாதிக்கின்றார்.

4. "எல்லை மூவுலகு முருவியன்றி நவர் காணுநாள் ஆதி ஈறின்மை வல்லையாய் வளர்ந்தாய்" (வாழா. 4) என்றும், "முன்னைப்பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளே, பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" (எம்பாவை. 9) என்றும், "ஆதியனே அந்தம் நடுவாகியில்லானே" (சிவபு. 73-4) என்றும் "மருவியெப் பொருளும் வளர்ப்போன் காண்க, நூலுணர்வுணர நுண்ணியோன் காண்க, மேலொடுகீழாய் நின்றோன் காண்க, அந்தமுமாதியு மகன்றோன் காண்க" (அண்டப். 47-51) என்றும் சான்றோர் கூறியவாறு காண்க.

தந்து ஒடுங்கும் [1]ஆதியின்மையின்—விரிவும் [2]ஒடுக்கமுடைய ஆதியாக ஒரு சரீரத்தையும் [3]வேண்டான்.

[4]இது [5]மாயாவாத நிராகரணம் பண்ணியது.

20—25. (பூதமாநகர்.......இலங்கியும்) பூதமாநகர் ஈர்இரண்டெய்தியும்—மகா பூதக்காலாகிய [6]சரீரநகரங்களான நால்வகைத் தோற்றத்திற் பிறப்பாகிய தேகங்களையெடுத்தும்; தீது அற ஒரீயும்—குற்றமற அவையிற்றை விட்டும் செல்லுமாறு யாங்ஙனமெனின்; கோபுரம் கூடம் மாடம் மாளிகை—கோபுரமென்றும் கூடமென்றும் மாளிகையென்றும்: விளிம்பு பளிங்கார்த்த பசும்பொன்வேதிகை—விளிம்பு பளிங்காலே சமைத்த செம்பொன் மேடையென்றும் அரமி

---

1. ஆதி—உடம்பு. உயிர் அசைவியாதலால், அசற்கு ஆதியாய்த்தொடரும் உடம்பினை ஆதியென்றார். தோற்றக் கேடின்மைபற்றி உடம்பை யாதியென்றாரென்றுமாம். ஆன்மாவுக்கு அதனின் வேறாகத் தேகமுண்மை கூறுவார், அவ்வான்மாவையுடைய முதல்வனாகிய பரமசிவனுக்குத் தோன்றி ஒடுங்குதற்குரிய தேகமுண்டு போலும் எனும் ஐயமறுத்தற்கு உதிந்தொடுங்கும் ஆதியின்மையின் என்றார். “ஸதேஹஸ்யாவிகாரித்வம் ஸ்வதேஹ வைராக்யமணபயா” (1 : 34) என்று பௌட்கரம் கூறுவது காண்க.

2. ஒடுக்கமில்லாத—உ. வே.

3. சிவனுக்குத் தேகம் வேண்டா என்பதை அகோரசிவாச்சாரியார், “சிவன் நித்தியமாயும் நின்மலமாயும் அதிசயமற்றதாயுமுள்ள, எல்லாப்பொருள்களையும் விடயமாகக்கொண்ட ஞானகிரியைகளுடன் கூடியிருத்தலால்” (இரத். 43–44 உரை) அவற்கு உடம்பு வேண்டா என்கின்றார்.

4. மாயாவாதத்தின் இயல்பை மாயாவாத சங்கற்பத்தாலும் நிராகரணத்தாலும் சங்கற்பநிராகரணத்துட் காண்க.

5. இதை சிவாத்துவித நிராகரணம் என்று செப்பறைப்பிரதி கூறுகிறது.

6. சரீரநகரிகளாகிய உற்பீசம் அண்டசம் சராயுசம் சுவேதசம் என்னும் நாலுவர்க்கத்துப்பிறப்பாகிய தேகங்களையெடுத்தும்—உ. வே.

யம்—நிலாமுற்றமென்றும்; முதல—இவை முதலாகவுள்ளன; [1]விரவுப் பெயர் பெறீஇக் கலங்கியும்—இடிந்தனவென்று பெயர் பெற்று நிலைகுலைந்தாலும்; கலங்காக் காரணத்து இலங்கியும்—அழியாத [2]காரணமாகிய பிருதிவிபோல விளங்கியும்;

26—31 (பாடல்........பெரிதே) பாடல் சான்ற பல்புகழ் நிறீஇ—பாடுவோர் பாடும் பாட்டுக்களால் அமைந்த [3]பல புகழை நிலைபெறக் கொண்டு; வாடாத்துப் பின—கெடாத வலியையும் பெற்று; அருளாபரணன்—அருளையாபரணமாகவுடையனுமாய்; அறத்தின் வேலி—தருமத்துக்கு வேலியானவனுமாய்; [4]பொருள்மொழி யோகம் கிரியையில் புணர்த்த—சத்தியவசனத்தால் [5]யோகபாதத்தையும் கிரியாபாதத்தையும் அடியேனுக்கனுக்கிரகித்த; கோடல் ஆதி அருள்மொழி திருமொழி போலவும்—[6]கோடலம்பர் கிழானுமாகிய முதன்மையமைந்த அருண்மொழித் தேவருடைய ஞானச் செல்வத்தைக்

---

1. விரவுப் பெயர்—பலவாய் விரவிய பெயர். கோபுரம் முதலியன செம்மை நிலையின் நீங்கி இடிந்து சீரழிந்திருப்பினும் அப்பெயர் நீங்காமையால் "விரவுப் பெயர்" என்றாரெனலுமாம்.

2. காரணம் காரியப்பாட்டுக் காரணமாதல்பற்றி, காரணப்பொருளில் வழங்குவதாயிற்று. பிருதிவி ஒன்றுதானே கோபுரம் முதலியவாக வுருப்பெற்றும், இடிந்து துகளாகிச் சீரழிந்தும் மண்ணோடு மண்ணோடாகியும் பலவேறு மாற்றமடையினும் நிலைபெற நிலவுதல் போல என்றதனால் நால்வகைப் பிறப்பினும் பலவேறு உடம்பு தோன்றி நின்று மறைந்து மாறினும் முதற்காரணம் நிலைபெற நிலவுதல் பெற்றாம்.

3. பல்புகழ் உலகமெல்லாம் பொருந்தி—உ. வே.

4. இதனால் இந்த நூலுமிர்ந்த ஆசிரியர், ஞானமொழிந்தவனை மூன்று பாதங்களையும் இடற்றியிருப்பமென்றெண்ணுதற்கு இடமுண்டாகிறது. இதனை முன்னுரைக்கட் கூறினம்.

5. யோகபாதக் கிரியாபாதங்களில் அனுக்கிரகித்த—உ. வே.

6. கோடற் பாகை கிழானுமாகிய—உ. வே. "கோடல் என்றது கோடலம்பாகையென்னும் ஊர்; அருணமொழியென்பது ஸ்ரீபரமானந்த முனிகளின் பிள்ளைத் திருநாமம்; குடிப்பெயர் அம்பர் கிழான்" என்று ஏனாதிவாடிப்பிரதி கூறுகிறது.

கொடுக்கும் உபதேசவசனம் போலவும்; பெரிது நன்று என்றும் நிலீஇபர்—ஆன்மா நாற்கதியிலும் உடம்புவிட்டும் உடம்பு எடுத்தும் [1]மிகவும் அழகிதாக என்றும் நித்தியமாயிருக்கும் எ-று.

இதும், மன், ஏ.—அசை.

தேகாந்தரம் முடிந்தது.

---

## பாசாநுநித்துவம்

### அகவல் 29

### கன்ம மாயை அநாதியெனல்

கருமம் போகந் தருமென வருளினை
நிருமல விருவினை யாக்க நிருமலி
ஆகத் தல்லதை யாகா ததுமுதல்
வேகத் தொடுவரல் வினவிற் றாயின்
5. [2]ஆணவ முதலன் றதுபோற் கருமமுங்

---

1. பெரிதும் அழகிதாக—உ. வே.

2. ஆகாமிய முதலிய வினைவகை மூன்றும் ஒன்றற்கொன்று காரணமும் காரியமுமாக நாசோற்பத்திபண்ணிவருதல்பற்றிப் பிரபஞ்சம் போல் பிரவாகாநாதி யன்றிப் பதிபொருள்போல் அநாதியன்றென்பாரும், முதற்காரணமாகிய மூலவினை பதி முதலிய பொருளோடொப்ப அநாதியாயுண்டென்பாருமென இரு திறத்தர் ஆசிரியர் என்றோதி, அவருள ஞானமிர்தாசிரியர் உண்டென்பார் வகையைச் சேர்ந்தவரென்றற்கு, "ஆணவ முதலன் றதுபோற் கருமமும் காண், அலதெனின் அக்கரைகழி நானுவிதம இனிது உயிர்கட் குதவுவது எதனால்; அற்றது மாயையும் மறறரிஅவணே" என்ற பகுதியை எடுத்துக் காட்டுவர் மாதவச் சிவஞான முனிவர் (சிவ. பாடியம். சூ. 2. அதி. 2.) இருவினையுண்மை ஈண்டுக் கரணுகமம், "எங்ஙனம மலம் அநாதியாயிருக்கின்றதோ அங்ஙனமே கன்மமும் அநாதியாகும்; இங்ஙனம் அநாதியன்றாயின பல்வகைக் காரியங்கள் உண்டுபண்ணப்படுதற்குக் காரணம் எதனால் என்பது பெறப்படாதாம்" என்று கூறுவது நோக்கத்தக்கது.

காணல [1]தெனினக் கரைகழி நாளு
விதமினி துயிர்கட் குதவுவ தெதனல்
அற்றது மாயையு மற்றறி யவணே
ஓதுவ துளதினு மொருவகை தீதுக
ஆகம் போகா தாக வல்வினை
ஏகா திருவினை யாகப் போகா
தாக மாயிடை முளுதியாது
பாகி னின்றது பன்னுங் காலே.

இது [2]விடுதலும் பற்றுதலும் கேட்டறிந்த சீடன் மூற்பிற்பாடு அருளவேண்டும் என்று விண்ணப்பஞ் செய்பக் கன்மமும் மாயையும் ஆணவம் போல் அநாதியெனச் சாதித்தது.

1—3. உரை: (கருமம்........ஆகாது) நிருமல—நின்பலனே; கருமம் [3]போகம் தரும் என அருளினை—கன்மத்தாலே தேகம் எடுத்தது என்று அருளிச் செய்தாய்; இருவினை ஆக்கல் திருமலி ஆகத்தல்லதை ஆகாது என—[4]அந்தப் புண்ணியபாவங்களையும் [5]அழகு நிறைந்த தேகத்தில கூடியிருந்தல்லது ஆர்ச்சிக்கும் [6]உபாயமில்லையே யென்று [7]விண்ணப்பம் செய்ப;

---

1. காணல வெனினக்—பா. வே.
2. வீடு பேறு கேட்டறிந்து மூற்பிற்பாடு கேட்கப் பாசம் அநாதியெனச் சாதித்தது—பா. வே.
3. போகமென்பது ஈண்டு ஆகு பெயராய் அப்போக நுகர்ச்சிக் கேதுவாகிய தேகத்தின்மேல நின்றது.
4. அந்தக் கன்மமும் தேகத்தி லல்லது ஆர்ச்சிக்கும் உபாய மில்லையாக இருந்தது என்று விண்ணபபஞ் செய்ப—உ. வே.
5. அழகு விளங்கிய தேகத்தில் அல்லது—உ. வே.
6. மார்க்கமில்லையே—உ. வே.
7. சீத்தலைச் சாத்தனாரும் உடலே வினைக்கு வித்தவும் பயனும் என்பார், 'வினையின் வந்தது வினைக்கு விளைவாயது" (மணி. 4 113) என்பர்; இனி, அருணந்திசிவாசாரியார், "உடற் செயல கன்மம் இந்த வுடல வந்த வாறே தெனனின், விடப்படு முன்னுடயபின் வினை யிந்த வுடல் விளைக்கும" (சிவ. சித். 2 : 10) என்றார்.

3—6. (அது முதல்........காண்) அது முதல் வேகத்தொடு வரல் வினவிற்றாயின்—அக்கன்மம் முதலில் விரைவுடன் வருதலைக் கேட்கின்றாயாயின்; ஆணவம் முதல் அன்று—ஆணவமலர் அநாதி; அதுபோல் [1]கருமமும் காண்—அதுபோலக் கன்மமலமும் அநாதியே காண்;

6—7. (அலதெனின்.......எதனால்) அலது எனின்—அப்படி யன்று இக்கன்மமலம் [2]ஆதியென்னில்; உயிர்கட்கு அக் கரை கழி நானுவிதம் இனிது உதவுவது எதனால்—ஆன்மாக்கட்கு அந்த எல்லையில்லாத நானுவிதமான போகம் [3]இனிதாகப் புசிக்கக் கொடுப்பது எதனாலே என்று கொள்வோம்;

---

1. ஈண்டு ஆசிரியர் கன்மம் என்றது மூலகன்மத்தையென அறிக. மேல் நிகழும் வினையும் பயனுமாகியவற்றுக்குக் காரணமாகிய மூல கன்மம் அநாதியென்றும், கன்மத்திற்கும் உடம்பிற்கும் உளள தொடர்ச்சியானது பிரவாகானுதியென்றும் (இரத். 174 உரை) அகோரசிவாசாரியார் கூறுகின்றார். ஆசிரியர் உமாபதிசிவனாரும் "ஏகனநேகனிருள் கருமம் மாயையிரண் டாகவிவை ஆறு ஆதியில்" (திருவருட். 6 : 2) என்று கூறுவர். ஆசிரியர் தொல்காப்பியனாரும் மூலவினையை யுடன்படுவர்: "வினையே செய்வது" என்ற சூத்திரத்துள் வினைக்காரணமாகிய தொழில் முதனிலையெட்டனுள் வினையே யென முதற்கண் மூலவினையைக் கூறுவது காண்க. மலகன்மம் மாயை மூன்றும் அநாதி என்பதை அருணந்திசிவனார், "மலமாயை கன்மம் அனுச்சிவன், அநாதி கனமம் அணுக்கள செய்ய அறிந்து கன்ம முடற் செயா, அநாதி காரியமா முடற்கள் அசேதனம் ஆணையா அறிந்து, அநாதி ஆதியமைக்க வேண்டும அமைப்பிறேடும் அநாதியே" (சிவ. சித்தி. பரபக். 50) என்பது காண்க.

2. ஆணவமலத்தைச் சகசமல மென்றும், ஏனை மாயை கன்மங்களை ஆகந்துகமல மென்றும கூறும் இயைபுபற்றி, கன்மம் ஆதி போலுமென மாணக்கன் ஐயுறுமைப் பொருட்டு அதனை யெடுத்து ஆசங்கிக்கின்றார்.

3. அநாதியில் இனிதாக; ஆதியில் இனிதாக—உ. வே.

1—4. உரை: (பையுள்........மற்றோ) பையுள் நீங்கப் பயன் பெருக்கக் [1] கைதூவாத செய்தியோர்க்கும்—வறுமைத் துன்பம் நீங்கு தற்காகப் பல பிரயோசனங்களும் உண்டாகவேண்டுமென்று கை யொழியாத [2] முயற்சியுடையோர்க்கும்; பருவரல் வருவது [3] துருவம் அல்லதை—மிடியாகிய துன்பமே வருவது ஊழ்முறைமையானால்; நன்னயம் வருவது மற்றோ—நல்ல இன்பம் வருவதும் அந்த ஊழா னல்லது வேறொன்றுலாமோ?

4—5. (அறிவழிந்து............அழுந்தல்) அறிவு அழிந்து அவல மாக்கடல் [4] அழுந்தல்—அறிவுகெட்டுப் பெரிய துக்கமாகிய சாகரத்தில் அழுந்தாதே கொள்.

5—6. (செயலில்........தீதிலாளர்) செயல் இல் என்று [5] ஆசற உணர்ந்த தீதிலாளர்—முன்செய்த கருமமல்லது ஒருவர்க்கொருவர் செயல் இல்லையென்று குற்றமற அறிந்த நல்லோர்;

---

1. 'கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும் பெருமையிற் பீடுடைய தில்'' (குறள் 1021) என்புழிக் கைதூவற்குக் கையொழி தல் என்றே பரிமேலழகரும் உரைத்தார்.

2. செய்தற் குரிய தாதலின், முயற்சியைச் செய்தி என்றார்; "பொறி யின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந் தாள்வினை யின்மை பழி" (குறள் 918) எனச் சான்றோரும் கூறுதல் காண்க.

3. நிச்சயம் என்னும் பொருட்டாய இவ்வடசொற்சிதைவு ஊழிற்குப் பரியாயமாய் வழங்கப்பட்டுள்ளது. "ஜாதஸ்யஹி த்ருவோ ம்ருத்யு:" (கீதை. 2 : 27) என்ற விடத்துத் துருவம் நிச்சயம் என்னும் பொருளில் வருவது காண்க. விந்து தத்துவத்தையும் துருவம், துருவையென வடநூல்கள் கூறுகின்றன.

4. அழுந்தல் : மகனெனல் (குறள் 196) என்புழிப் போல அல்லீற்று எதிர்மறை வியங்கோள்.

5. ஆசறவுணர்ந்தோர் என்றொழியாது மீட்டும் தீதிலாளர் என்றது, உணர்வின்கண் தீதில்லையாகவே, ஏனை உரையினும் செயலினும் அஃது இலராதல் தோன்றற்கு; ஆகவே, உணர்வு, உரை, செயல் மூன்றினும் தீதில்லோர் நல்லோர் எனப்படற்கு இழுக்கின்மையின் நல்லோர் என்று உரை கூறப்பட்டது.

7—10. (மான்மதம்......இடிப்பினும்) மான்மதம் [1]பளிதம் வார்நறுஞ் சாந்தம் தாள்முதல் பழிச்சுநர் தைவந்திடினும்—கத்தூரியும் கற்பூரமும் கொழுவிதாய நறுநாற்றத்தையுடைய சந்தனக் குழம்பும் பாதாதி கேசம் வரைத் தோத்திரம் பண்ணினராகிச் சாத்தினாலும்; செவி சுடூஉத் தகைய மொழி பல பயிற்றி—செவியிலே நாராசத்தைக் காய்ச்சி வற்றினாற் போன்ற இகழ்ச்சி வசனங்கள் பல சொல்லி; மயிரின் தகைத்து வறுத்து எரித்து இடிப்பினும்—மயிர்போல நுண்ணிதாக அரிந்து நெருப்பிலே யிட்டுச் சுட்டுப் பொரித்து அரிந்த புண்ணிலே வேல்கொண்டு குத்தினாலும்[2];

11—14. (ஞானமாத்துலே........இவரே) ஞான மாத்துலே சீர் புகுத்து—இவ்விரண்டும் ஒக்க ஞானமென்னும் மகத்தாகிய தராசிலே [3]சீர்தூக்கி; ஆ நாம் முனைப்பாற் செய்தி நகைப்பாற்[4]பட்டடென— என்னே என்னே! நாம் முற்பவத்திற் செய்த கன்மபலம் இப்பொழுது சிரிக்கும் பகுதி யாயது என்று; மூரல் முறுவல் அல்லதை—

1. பளிதம்—பாளிதம் என்றும் வழங்கும்; "அடகு புலால் பாகு பாளிதமும் உண்ணான், கடல் போலும் கல்வியவன்" (தொல். சொல். 284 சேன. மேற்.)

2. "உறுப்புப் பல வறுக்கினு முயிர்முதல் திருக்கினும், நிறுத்துப் பல வூசி செருக்க வூன்றினும், கறுத்துப்பல கடிய காட்டினும் காட்டாது, சிறப்புப் பல செய்யினும் திரிந்து பிறிதுரையாள்" (பெருங். 4 : 10 : 21–4) என்பது ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

3. பிற சான்றோரும், "தத்தமக்குக் கொண்ட குறியோ தமவல்ல, செத்துக சாந்து படுக்கமனம்—ஒத்துச், சமத்தனாய் நின்றொழுகும் சால்பு தவமே, நுகத்துப் பகலாணி போன்று" (பழ. 95) என்று கூறுதல் காண்க.

4. பட்டதென எனற்பாலது பட்டடென நின்றது.

சிறுமுறுவல் கொள்ளுமதல்லது; [1]தேரின்—ஆராயுமிடத்து; உவகை கலுழ்ச்சியோ இலர்—[2]பிரியாப்பிரியம் கொள்ளுவதிலர்[3];

14—15. (உரையிடை..........மாதோ) [4]உரையிடை மறந்தனென்—ஆயினும் சொல்லுமிடத்தே நான் கூற மறந்தன சில உள;

15—20. (உவகை........ஆனோரே) இவர்க்கு உவகை—இவர்க்குப் பிரியமாவது; இடர் இலம் என மனக்களியோர்—[5]இவ்விரண்டுக்கும் விருப்பு வெறுப்பாகிய விதனமில்லோம் என மனக்களிப்பையுடையோராதலும்; கலுழ்ச்சி—இவர்க்குத் துக்கமாவது தீங்குசெய்தியோர்

---

1. சிறுமுறுவல் தானும் உவகையோ எள்ளலோ குறியாது வறிதே நிலவுவதென்பார், தேரின் என்றார். "அகழினு நிகழுஞ் சாந்த மணியினு மடைய வைதிட் டிகழினும் புரள வெட்டி யிடிப்பினும் பொடிய தாக்கித், திகழினும் செழுந்தண்மாலை நீயொடு மலத்தையே யிட் டிகழினும் பொறுத்தலால் நல் யோகியைப் போலும் ஞாலம்" (பெருங். 173) என்று சான்றோர் கூறுவது காண்க.

2. உவகையோ கலுழ்ச்சியோ இலர் என ஓகாரத்தை உவகைக்கும் கூட்டி, பிரியமோ அப்பிரியமோ கொள்வது இலர் என்று கூறியவாறு.

3. இவர் என்பது இனைபானர் (அடி 19-20) என்புழிக் கூட்டி உரைக்கப்படுகிறது.

4. ஒரோவழி உவகையும் கலுழ்ச்சியும் இவர்பால் உளவாதலுமுண்டு என்பார், "உரையிடை மறந்தனென் யானே" என விதந்தோதினார்.

5. இவ்விரண்டுமாவன: மான்மதம் முதலியனகொண்டு தைவருதலும், செவி சுடுஉத் தகைய மொழிந்து தலைகைத்தல் முதலிய துன்பம் செய்தலும் என்ற இரண்டு, ஈண்டு வரும் இன்பதுன்பங்கள் முன்னை வினையின் விளைவேயன்றிப் பிறிதில்லையாதலின், நமக்கு இவற்றாலாவ தோராக்கமில்லை என்று தேறி, இவ்வாற்றால் வினைப் பொறை கழிவது கண்டு மனக்களிப்புடையராகின்றார் என்றற்கு, இடரில மென மனக் களியோர் என்றார். "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" (திருவா. குழை. 7) என்ற மணிவாசகம் நினைவு கூரத்தக்கது. வினையின் விளைவாகிய சுக துக்கங்களைக் கழித்தற் கென்றே தேகம் வந்தது என மிருகேந்திரம் முதலிய ஆகமங்கள் கூறுகின்றன.

நீங்கா நிரயத்து அழுந்துதற்கு ஏதுவாயினம் என—[1]நமக்கு விதனம் பண்ணினீர் [2]சின்னாளில் ஒழியாத நரகத்தில் அழுந்துதற்கு ஏதுவாயிருந்தோமென்னும் [3]இத்தால்; அழிந்த நெஞ்சமொடு இனைபு ஆனார் இவர்—அழிந்த மனத்தோடே துயருடையராதலும் இவர் உரியர்[4];

20. (பெயர்த்தும்............யானே) பெயர்த்தும் யான் ஒன்று அயர்த்தனென்[5]—மற்றும் யான் ஒரு பொருளைக் கூற மறந்தேன்;

21—22. (தொடுத்த..............உரியர்) தொடுத்த வெவ்வினை எவ்வளவு உடைத்தெனக் கையற்று—அஃதாவது பந்திக்கப்பட்ட வெவ்விதாகிய பிராரத்த கன்மம் இன்னும் [6]எவ்வளவு காலம் உடையதோ என்று மனமழிந்து; இன்னல் எய்தலும் உரியர்—துக்கப் படுதலும் உரியர்; ஆதலால்,

---

1. தமக்கு—உ. வே.

2. நீங்காத நரகத்தார் கையில் அலமருதற்கு நாம் ஏதுவாயினோம் என்னும் இத்தாலே மனசு அழிதலோடே அளவில்லாத் துயரமுடையராதலுமாம்—உ. வே.

3. இத்தால் என்புழி அன்சாரியை தொக்கது. விண்படர்ந் தத்தூடு (சிவ. போ. சூ. 2 அதி. 3 வெண். 1) என வருதல் காண்க.

4. அச்சான்றோரெய்தும் மனக்கவலைக்கு மேலுமொரு கருத்துண்மை கண்டு கூறுகின்றாராதலின், பெயர்த்தும் ஒன்று அயர்த்தனென் யானே என்றார்.

5. "எம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை, எரிவாய் நிரயத்து வீழ்வர் கொல் லென்று, பரிவதூஉம் சான்றோர் கடன்" (நாலடி. 58)
விலை
நோ
(குறு

6. எவ்
இற்
இன்
நிற்
என

23—24. (அன்னே........நெடியோர்க்கே) அன்னே—ஐயோ; நாடரும் கேள்வி நெடியோர்க்கு—அறிதற்கரிதாகிய [1]முத்தியுபாய விசாரத்தால் உயர்ந்தோர்க்கு; வீடு இதன் ஊங்குமற்று எவன்—இவ்வனுபோகத்தின் மேற்பட்ட முத்தி[2]நெறி மற்றுயாதோ? எ. று.

ஏகாரம் தேற்றம். ஓகாரம் முன்னது எதிர்மறை. ஓ, ஏ. மாது, ஆங்கு அசை.

## அகவல் 39

### நல்வினை நிகழ்ச்சி.

நஞ்சினி தருத்தினு நல்வினை மாட்சி
வஞ்சமில் லோர்க் கமிழ்தா கற்றே
நஞ்சம லயினி நாக முயர்த்தோன்
வெஞ்சின வீமன் வீடிட வருத்தி
நாக நூக்க நாகரும் பெறுஅ
ஆரமிழ் தன்றி [3]யணங்குகொடு நடந்த
பேரிசை யோனே[4] பாரத மிசைக்கும்
அன்னே ணவ்வை யருமுனி பணியிற்
கன்னனைப் பயந்து நன்னதி யியக்க
அங்கர் கோனு யரசுதலை [5]பணித்துப்
பொங்குதிரை யாடப் புரவுப் பூண்டிசினே

---

1. முத்திக்குபாயம் விசாரிப்போர்க்கு—உ. வே.

2. வீடுபேறு; விடுதலை—உ. வே.
" [illegible]
[illegible] ।।"
என்றும் மிருகேந்திரம் கூறுவது ஈண்டு நினைவுகூர்த்தக்கது.

3. அணங்கொடு—பா. வே.

4. பேரிசை தானே—பா. வே.

5. பணிப்பப்—பா. வே.

இது "முனைப்பாற் செய்தி[1]" ஊழ்வலியால் நல்வினை நிகழுங் காலத்து வந்த தீமையும் நன்மையாம் என்று சொல்லியது.

1—2. உரை: (நஞ்சு........அற்றே) நல்வினை மாட்சி [2]வஞ்சம் இல்லோர்க்கு-[3]நல்வினை மாட்சிமைப்படுதலால் அழிவில்லாதோர்க்கு; நஞ்சு இனிது அருத்தினும்—நஞ்சை இனிதாகப் புசிப்பிக்கினும்; அமிழ்தாகற்றே—அமிழ்தாகின்ற அத்தன்மையாகவே முடியும், [4]அஃது எவ்வாறெனின்:—

3—7. (நஞ்சமல்.......இசைக்கும்) வெஞ்சின வீமன் வீடிட—வெவ்விய சினத்தையுடைய வீமன் மரிக்கவேண்டுமென்று; நாகம் உயர்த்தோன்—நாகத்தைக் கொடியிலே யெழுதி யுயர்த்திய துரியோதனன்; நஞ்சு அமல் அயினி அருந்தி—[5]நஞ்சு கலந்த சோற்றைப் புசிப்பித்து; நாகம் [6] தூக்க—நாகலோகமாகிய பாதாள லோகத்திலே

---

1. தன்வருகை தெரியாமே போந்து போகூழ்ப் பயனும் கேடு செய்தலின், வஞ்சம் என்றார். மாட்சி யென்புழி மூன்றுவது விகாரத்தால் தொக்கது.

2. ஞானு. 38 : 12.

3. நல்வினை மாட்சியால்—உ. வே.

"அஞ்சுதரு தீவினையி னலமுறு நஞ்சாம், நஞ்சமமு தாமுரிய நல் வினையின் மாதோ" (வில்லி. ஆதி. சம்ப. 100).

4. "நல்வினை யுடைய நீரார் நஞ்சுணி னமுதமாகும்"—சீவக. 2315.

5. துரியோதனன் உண்பித்த நஞ்சு காளகூடமென்னும் நஞ்சு; நாக லோகத்துப் பாம்புகளின் விடம் சங்கம நஞ்சு. சங்கமநஞ்சு வீமன் உடற்குட் புகுந்து ஆங்கிருந்த காளகூட நஞ்சைக் கெடுத்து விடவே, அவன் ஊறின்றி உயிரோடிருப்பானாயினன் என்று பாரதம் கூறுகிறது.

6. "ஒல்லை நீர்புக நூக்க வென்வாக்கினால்............நீலக்குடியான் நல்ல நாமம் நவிற்றி உய்ந்தேனரோ—(திருநா. திருநீலக்குடி 3.)

செல்லத் தள்ள; [1]நாகரும் பெறூஅ அமிழ்தன்றி-நாகலோகத்திலுள்ள தேவரும் பெறுதற்கரிதாகிய நிறைந்த அமுதத்தைப் [2]புசித்ததுவே யன்றி; அணங்கு கொடு நடந்த பேரிசையோன்—அவர் [3]விவாக பூருவமாகக் கொடுத்த நாககன்னியையும் பாணிக்கிரகணம் பண்ணிக் கொண்டுவந்த [4]பெரிய கீர்த்திமானுனன்; பாரதம் இசைக்கும்—இது [5]மகாபாரத்திலே சொல்லியிருக்கிறது, காண்;

8—11. (அன்னோன்.................பூண்டிசினோ) அன்னோன் அவ்வை—அத்தன்மையனான வீமன் மாதாவாகிய குந்திதேவி; அருமுனி பணியின் கன்னனைப் பயந்து—அரிய தவத்தையுடைய துருவாசமாமுனிகள் [6]பிரசாதித்த [7]மந்திரத்தாலே கன்னனைப்பெற்று

---

1. நாகரும் பெறூஅ அமிழ்தென்றது ஆரியகன் என்னும் பாம்பு கூறியாங்கு வாசுகியால் வழங்கப்பட்ட இரசம். ஒரு குடம் ஆயிரம் யானையின் வலியைத் தருவது; வீமன் எட்டுக் குடம் குடித்தான். இவ்வெட்டுக் குடமும் மிக்க ஆற்றல் நிரம்பின வாதலின், வீமன் பதினாறாயிரம் யானைகளின் வலியைப் பெற்றான்.

2. புசித்ததன்றியே—உ. வே.

3. இத்தொடர் சில ஏடுகளில் இல்லை.

4. பெரிய கீர்த்தியை யான் சொன்னேனல்லேன், பாரதந் தானே சொல்லா நிற்கும்—உ. வே.

5. வியாச பாரதம் ஆதிபருவத்து நூற்றுமுப்பத்தெட்டாவது அத்தியாயத்துள் இச்செய்தி காணப்படுகிறது.

6. மந்திரத்தை யருளிய காலத்தில் துருவாசர், "நீ இந்த மந்திரத்தினால் எந்த எந்தத் தேவதையை ஆவாஹனம் செய்வாயோ அந்த அந்தத் தேவதையின் மஹிமையோடு கூடிய புத்ரன் உனக்குப் பிறப்பான்" என்று சொன்னாரென்று வியாச பாரதம் (ஆதிபருவம் அத்தி. 120) கூறுகிறது. பின்வந்த வில்லிபுத்தூரரும், "தேவரில் யார் யாரைக் கருதி நீ வரவழைத்தனை யவரவர்சணத்து நின் காஞ் சேர்வார்" என்றும், "தம்மையொப்பதோர் மகவையுந் தருகுவர்; தவப்பயன் எனப்பெற்ற இம்மறைப்பயன் இம்மையி லுனக்கு வந்தெய்தியது" எனக் கூறினா னென்பர் (ஆதி. சம்பவ. 29, 30).

7. மந்திர தியானத்தாலே கன்னியாய் இருக்கையிலேயே ஒரு பிண்டத்தை விழுங்கிக் கன்ன துவாரத்தாலே கன்னனைப் பெற்று; கன்னியாயிருந்தபோதே சூரியனை வரவழைத்துக் கூடிக் கன்னனைப்பெற்று—உ. வே.

நன்னதி இயக்க—[1] வாநதியாகிய கங்கையாற்றிலே மிதவற்பேழையிலே வைத்துக் [2] செல்லவிட; அங்கர் கோனாய்—[3] துரியோதனனுக்குத்தோழனாய் அங்கதேசமென்னும் இராச்சியத்துக்குக் கர்த்தாவாய் [4] அங்கராசனென்று மகுடாபிஷேகம் பண்ணப்பட்டு; அரசு தலைபணித்து [5] பகையரசர் தன் பாதத்தில் வீழ்ந்து திறை செலுத்தப்பண்ணி; பொங்குதிரை யாடைப் புரவும் பூண்டிசின்-பெரிய சமுத்திரஞ் சூழ்ந்த [6] வையகத்துக்கு [7] உபகாரியென்னும் பெயரைப் பூண்டனன். எ. று.

ஏ. முன்னது தேற்றம், பின்னது தெரிநிலை. இசின், அசை.

---

1. நல்ல கங்கையாற்றிலே ஒரு மிதவைப்பேழையில் ஒழுக்க —உ. வே.
2. இச் செல்லவிட்ட செய்தியை, வில்லிபுத்தூரார், "பூமாநதிப் பேடகத் திடைநனி பொதிந் தொழுக்கினள் மன்னே" என்றும், கங்கையாறு கொண்டுசென்ற திறத்தை, "பைம்பொற் பஞ்சரத் திடை வருதிரு மதலையைப் பகீரதியெனு மன்னை, சஞ்சாரந்திரைக் கரங்களா லெடுத்தெடுத் தசையவே தாலாட்டி வெஞ்சரச் சிலைச் சூதநாயகன்பதி மேவுவித்தனளன்றே" (ஆதி. சம். 39 40) என்பர்.
3. இத்தைத் திரிதராட்டிரன் தேர்ப்பாகன் கண்டெடுத்து வளர்க்க வளர்ந்து துரியோதனனுக்குத் தோழனாய்—உ. வே.
4. கிருபாசாரியர் கன்னனை இகழ்ந்து கூறியது கேட்டதும் துரியோதனன், "இந்த அர்ச்சுனன் ராஜனல்லாதவனோடு யுத்தம் செய்ய விரும்பானாயின், அந்தக் காரணம்பற்றியே நான் இந்தக் கன்னனை அங்க தேசத்தின் ராஜாவாகப் பட்டாபிஷேகம் செய்கிறேன்" (வியாச. பா. ஆதி. அந்தி. 146) என்று முடிசூட்டுவதும், யாது கைம்மாறு செய்வேனென நன்றி கூறிய கர்ணனுக்குத் துரியோதனன் அவனை நோக்கி, அதிக ஸ்நேகத்தை விரும்புகிறேன் என்பதும், அவன் அவ்வாறொழுகியதும் ஈண்டு நினைவுகூறற்பாலன.
5. இவ்வுரை சில ஏடுகளில் இல்லை.
6. வையகத்தைக் காக்கும்—உ. வே.
7. உபகாரியாகிய சிறப்பை, வில்லிபுத்தூரார், "வல்லார் வல்ல கலைஞருக்கும் மறைநூலவர்க்குங் கடவுளர்க்கும், இல்லாதவர்க்குமுள்ளவர்க்கும் இரந்தோர்தமக்கும் துறந்தவர்க்கும், சொல்லாதவர்க்கும் சொல்பவர்க்கும் சூழும் சமயாதிபர்களுக்கும், அல்லாதவர்க்கும் இரவிமகன் அரிய தான மளிக்கின்றான்" (கிருட். 235) என்று கூறுதல் காண்க.

## அகவல் 40.

## தீவினை நிகழ்ச்சி

அறப்பயன் றீனி னமிந்தே யானுங்
கடுப்பா டெய்தல் விடுத்தோ வின்றே
தக்க னெடுத்த மூத்தீ முற்றத்
தொக்க வானோ ருற்றதை பெரிதே
எயிறுந் துண்டமு முகனுங் கையும்
அந்தியும் வாணியு மிந்துவு மெரியும்
இடிப்பத் தக்கனி ருஞ்சிர மிழந்து
தகர்ச்சிர மெடுத்துப் [1]பிழைத்ததை யரிதே
வாசவன் கோகில மாயினன் கேசவன்
[2]பேயா யகன்று தாயினன் கடிதே
[3]இந்திர சித்தோ டியாளி வரருசி
தந்திரம் [4]பயின்றோர் தலைமையின் வழாஅர்
வினைப்பய னுணர்ந்து வெல்வகை [5]நாடித்

---

1. மிகைத்ததை—பா. வே.
2. சாவா யகன்று தாவினன் கடிதே—பா. வே. பேயா யகன்று பெயர்ந்தனன் பறந்தே —பா. வே.
3. இந்திரசித்து, யாளி, வரருசி என்ற மூவர் கதை வடமொழிக் கதா சரித் சாகரம் என்னும் கதைக் கடலில் வேறுபட்டுக் காணப்படுகிறது. அவ்வடமொழிக் கதைக்கடற்கு முதனூல் குணாட்டியர் என்போரால் பைசாச மொழியில் எழுதப்பெற்றதென்றும், வடமொழி நூல் மொழிபெயர்ப்பேயன்றி முதனூலன்றென்றும் கூறுவர். ஆகவே, ஈண்டு வரும் இக்கதை, வடமொழிக் கதையின் வேறுபடுதலால், இறந்துபோன முதனூலைக் கொண்டு ஒப்பு நோக்கினாலன்றி உண்மை நிகழ்ச்சி விளங்காத வகையில் உளது.
4. பயின்று—பா. வே.
5. நாடா—பா. வே.

தவத்திறம் படருங்காலை [1]முகைத்தபு
கொம்மை வெம்முலை யிளையோட் கூடும்
தன்மைய [2]னன்றியு மருந்தினன் றணியல்
அயில்புரை நெடுங்க ணம்பணைத் திரடோள்
மயிலியற் சாயற் குயிலியற் கிளவிக்
கலங்கழி மகளி ரையிரு றூற்றுவர்
மணந்தோன் மன்ன னுணங்க யாளி
கூவற் றூண்டிய [3]காதற் காசனி
[4]ஆதிப் புலைச்சி யாகி மேதினி
இன்னிசை யெழுவர்ப் பயந்தோ [5]னீண்டே
சிந்து நாடன் செயத்திர தன்முடி
இலங்கிலை வாளியி னிறுத்தோ னிற்ப
நிலம்புக வெறிந்த [6]தன்றலை தவம்புரி
தந்தை தரைசே ரந்தரம் பெரிதே
பாண்டவர் மரபி னுண்டகைக் குரிசில்
சனமயன் வேள்விக் [7]குருமுனி யுற்ற
தன்மையு நன்மைய வன்றே விண்ணோர்
மகுடம் புனைந்த நகுடன் பாந்தட்
படிவங் கொண்டு படிசேர்ந் தன்னே

---

1. முகைத்தாழ்—பா. வே.
2. தன்மை யன்றி—பா. வே. தன்மையனுகி வருந்தினன் றள்ளில் —பா. வே.
3. மாதர்ப் புலைச்சி; மாதப் புலைச்சி—பா. வே.
4. இவ்விரண்டடிகளும், கூவற் றூண்டு மாதப் புலைச்சி, காதற் காசனி யாக மேதினி ” என அச்சுப்பிரதியிற் காணப்படுகின்றன.
5. வீண்டே—பா. வே.
6. தவம்புரி தந்தை, தன்றலை—பா. வே.
7. குறுமுனி—பா. வே.

திருமணி வள்ளத் துயிர்மருந் [1] துதவிற்
றடப்படு தெண்ணீ ரானும்
35. உடற்பகை யற்று லுணருங் காலே.

இஃது ஊழ்வலியால் தீவினை நிகழுங்காலத்து வந்த நன்மையும் தீமையாம் என்பது கூறியது.

1—2. உரை: (அறப்பயன்........இன்றே) அறப்பயன் தீரின்—பூருவ புண்ணிய கன்மம் புசித்தற்ற காலத்து ; அமிழ்தேயானும் கடுப்பாடு எய்தல்—[2] அமுதமே யாயினும் நஞ்சின் றன்மைத்தாதல் ; விடுத்தோ இன்று—விட்டொழியுமதில்லை, அஃது எவ்வண்ண மென்னில் ;

3—4. (தக்கன்........பெரிதே) தக்கன் எடுத்த முத்தீ முற்ற—[3] தக்ஷப் பிரஜாபதியானவன் எடுத்துக் கொண்ட யாகம் முடித்தற் பொருட்டு; தொக்க வானோர் உற்றது பெரிது—கூடிய தேவர்கள் பட்ட அபசயம் பெரிதாகும் ;

5—8. (எயிறும்..............அரிதே) [4] அந்தி எயிறும் வாணி துண்டமும் இந்து முகனும் எரி கையும் இழப்ப—[5] ஆதித்தர் பன்னிரு

---

1. துதவி—பா. வே.
2. அமிழ்நத்தையே புசிக்கினும்—உ. வே.
3. தக்ஷப்பிரஜாபதி, தக்ஷனென்னும் பெயருடையவனும் பிரமாவின் புதல்வனும் ஆகியவன். பிரமாவின் மகனாதல்பற்றிப் பிரஜாபதி எனப்பட்டான். இவன் பிரமாவின் வலக்கைக் கட்டை விரலினின்று பிறந்தானென்று வியாச பாரதம் (ஆதி. அத். 67) கூறுகிறது. இவன் செய்த யாகத்தில் தேவர் முறிந்தோடிய செய்தியை "சாடிய வேள்வி சரிந்திடத் தேவர்கள், ஓடிய வாபாடி யுந்தீபற, உருத்திர நாதனுக் குந்தீபற" (திருவுந்தி. 5) என்று திருவாசகம் கூறுகிறது. வானோர் உற்ற பரிபவத்தைப் பின்னர் விரித்துக் கூறுதலின், ஈண்டுத் தொகைவகையில், தொக்கவானோ ருற்றது பெரிதே என்றார்.
4. இப்பகுதி உரைக்கேற்ப முறை செய்யப்பட்டது.
5. ஆதித்தர் பன்னிருவருள் பூஷன் என்பான் பல்லிழந்தானென்று யசுர்வேத தைத்திரிய சங்கிதை கூறுகின்றது. திருவாசகம், "சூரியனார் தொண்டை வாயினிற் பற்களை, வாரி நெரித்தவாறுந் தீபற" (15) என்று கூறுகிறது.

வருள் ஒருவன் பல்லும் [1]வாணி மூக்கும் சந்திரன் முகமும் [2]அக்கினி கையும் இழப்ப ; தக்கன் இருஞ்சிரம் இழந்து—தக்கன் தனது [3]பெரிய தலை அறுப்புண்டிழந்து ; தகர்ச் சிரம் எடுத்துப் பிழைத்தது அரிது—பின்பு சிவபெருமான் அனுக்கிரகத்தால் [4]ஆட்டின் தலையைப் பெற்றுப் [5]பிழைத்ததே அரிதாயிற்றுக் காண் ;

9—10. (வாசவன்....... ....கடிதே) [6]வாசவன் கோகிலம் ஆகினன்—இந்திரன் குயிலாய்ப் பறந்து திரிந்தனன் ; கேசவன் பேயாய் அகன்று கடிது தாயினன்—[7]விட்டுணு பேயாய் நீங்கிக் கடிதாகத் தாவிச் சென்றான் ;

11—16. (இந்திரசித்தோடு........தணியல்) இந்திரசித்தோடு யாளி வாருசி—[8]இந்திரசித்தும் யாளியும் வாருசியுமாகிய இருடிகள்

---

1. வாணி மூக்கும் சந்திரன் முகமும் இழந்து அல்லலுற்றதை, "நாமகள் நாசி சிரம் பிரமன்படச், சோமன் முகநெரித்துந் தீபற, தொல்லை வினைகெட வுந்தீபற" (ஷை 13) என்பது காண்க.

2. அக்கினி கை யிழந்ததை, "வெய்ய வனலங்கி விழுங்கத் திரட்டிய, கையைத் தறித்தானென் றுந்தீபற" (ஷை 7) என்பதனு லறிக.

3. பெரிதாகிய தலையை அறுப்புண்டிழந்து—பா. வே.

4. தக்கன் ஆட்டின் தலைபெற்ற செய்தியை, "ஆட்டின் தலையை விதிக்குத் தலையாகக், கூட்டிய வாபாடி யுந்தீபற" (ஷை 11) என்பது காண்க.

5. பிழைத்தது அரிதுகாண்—உ. வே.

6. இந்திரன் குயிலாய வகையை, "புரந்தர னாரொரு பூங்குயி லாகி, மரந்தனி லேறினா ருந்தீபற, வானவர் கோனென்றே யுந்தீபற" (ஷை 9) என்பதனு லறிக.

7. இனித் திருவாசகம், விட்டுணு பேயுருக் கொண்டதாகக் கூறாமல், "ஆவா திருமால் அவிப்பாகங் கொண்டன்று, சாவா திருந்தானென் றுந்தீபற" (ஷை 6) என்றே கூறுகிறது.

8. இம்மூவரையும் வாருசி, வியாடி, இந்திரதத்தர் என்று வடமொழிக் கதாசரித் சாகரம் என்னும் நூல் கூறுகின்றது.

மூவரும்; [1]தந்திரம் பயின்றோர் தலைமையின் வழாஅர்—சாத்திரங்களெல்லாம் பயின்று தங்கள் முதன்மைத் தன்மையில் வழுவாதவராகி; [2]வினைப்பயன் உணர்ந்து—தங்கட்குப் பூருவ கன்மபலம் வருவதை [3]முன்பே அறிந்து; வெல்வகை நாடி—அதனை வெல்லும் உபாயம் காண்பாராய்; தவத்திறம் படருங்காலை—தவத்தைப்பூண்டு தேசாந்தரம் சஞ்சரிக்கிற காலத்திலே; [4]முகைத்தபு கொம்மை வெம்முலை இளையோள் கூடும் தன்மையன் அன்றியும்—(வரருசி) [5]கோங்கரும்பை [6]வீழ்த்திய திரட்சியும் விருப்பமுமுள்ள தனங்களையுடைய [7]இளையாளைக் கூடுதலாகிய தன்மையுடையனுனதேயல்லாமலும்; தணியல் அருந்தினன்—சுராபானமும் பண்ணினான்;

17—20. (அயில்............உணங்க) மன்னன் உணங்க—ஓர் அரசன் தேகம் விட்ட காலத்திலே; அயில்புரை நெடுங்கண்—வேலையொத்த நெடிய கண்ணையும்; அம்பணைத் திரள்தோள்—அழகிய மூங்கிலைப் போன்ற திரட்சியையுடைய தோளையும்; மயிலின் சாயல்—மயிலையொத்த சாயலையும்; குயில் இயல் கிளவி—குயில்போன்ற

1. தத்துவ மந்திரப் பொருளை உண்டாக்குவதும் காப்பாற்றுவதும் செய்யும் காரணத்தால் சாத்திரம் தந்திரமெனப்படும்; இத்தகைய சாத்திரம் ஆகமமாதலால் ஆகமங்கள் தந்திரமெனப்படுகின்றன. (காமிகாகமம். தந்திராவதாரப்படலம். சு. 29).

2. கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய ஞானக் கண்ணுடையராதலின், வினைப்பயனை முன்பே உணர்ந்து கொண்டனர்.

3. இச்சொல் சில பிரதிகளில் இல்லை.

4. முலையாகிய சிறப்பையுடைய வுறுப்பிற்குக் கோங்கரும்பே சீரிய வுவமையாகச் சான்றோர் எடுத்து வழங்குபவாதலின், ஈண்டு முகையினைக் கோங்கின் முறையாகவுரை கூறப்படுகிறது. "கோங்கின் குவி முகிளமுலை" (முருகு. 34-5) என வருதல் காண்க.

5. சிவகணங்களுட் சிறந்தோருள் ஒருவராகிய புட்பதந்தரென்பவரே உமையம்மையின் சாபத்தால் நிலவுலகத்தில் கௌசாம்பிநகரத்தில் வரருசியென்றும் காத்தியாயனர் என்றும் பெயர்தாங்கி நிலவினர் என்று வடமொழிக் கதாசரித்சாகரம் என்னும் நூல் கூறுகின்றது.

6. தாழ்த்திய—உ. வே.

7. தன்னொடுபிறந்த தனக்கு இளையாளை—உ. வே.

வசனத்தையுமுடைய அவன் மனைவியர்களாகிய; [1]கலங்கழி மகளிர் ஐபிருநூற்றுவர்—மங்கலவணியைக் கழித்த விதவைகள் ஆயிரவரை; [2]மணந்தோன்—[3]இந்திரசித்து முனிவன் [4]பரகாயப் பிரவேசம் பண்ண வல்லலவ னாதலாலே அவனுடைய தேகத்திற் புகுந்து கூடிக் காமவின்பம் கொண்டான்;

20—23. (யாளி..........ஈண்டே) ஈண்டே—இவ்வண்ணமே; யாளி—யாளியென்பவனும்; காகற் காசனி—தன் சிநேகத்துக்கு இருப்பிடமானவளான; கூவல் தூண்டிய—தன்னாலே கிணற்றிலே தள்ளப்பட்ட; ஆதிப் புலைச்சி யாகி—பழைய சண்டாளப் பெண்ணாதலாலே அவளோடேகூடி; மேதினி இன்னிசை யெழுவர்ப் பயந்தோன்—இவ்வுலகத்திலே இனிய கீர்த்தியையுடைய [5]யோகநந்தன் முதலிய பிள்ளைகள் [6]எழுவரைப் பெற்றான்.[7]

---

1. கலங்கழி மகளிர்—கைம்பெண்டாட்டிகள்; "கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய கழிகல மகடூஉ" "கழிகல மகளிர்" (புறம். **261, 280**) எனச் சான்றோர் கூறுதல் காண்க.

2. மணந்தோன் (20) பயந்தோன் (23) என்ற வினை முற்றுக்கள் ஆவோவாகச் செய்யுளில் வந்தவையாகும்; "பாலறி மரபின் அம்மூவீற்றும் ஆவோ வாகும் செய்யு ளுள்ளே" (**தொல். சொல். வினை. 14**).

3. விதேசநாட்டுத் தேவ சுவாமி என்னும் பார்ப்பானுக்கு இந்திரசித்து மகனாவான்; **கதாசரித்சாகரத்தில்** இவன் இந்திரதத்தன் என்று அழைக்கப்படுகின்றான்.

4. இந்திரசித்துப் பரகாயப் பிரவேசம் பண்ண வல்லவ னென்பது வரருசி கதையிலும் காணப்படுகிறது.

5. சுநந்தன் முதலிய எழுவரைப் பெற்றான்—உ. வே.

6. அச்சுப்பிரதி, "கபிலருள்ளிட்ட ஏழு பிள்ளைகளையும் பெற்றனள்" என்று கூறுவதோடு, அதனடிக் குறிப்பில், "எழுவர்ப் பயந்தோ னென்றதற்குத் திருவள்ளுவர் அதிகமான் கபிலர் ஔவை உப்பை உறுவை வள்ளி என்னும் ஏழு பிள்ளைகளையும் பெற்றன ளெனவுரை கூறிய பிரதியுமுண்டு" என்று கூறுகிறது. இதனை, **ஆதிப்புலைச்சி** யென்றும் பிள்ளைகள் எழுவரைப் பெற்றன ளென்றும் வருவது கொண்டு **இடையிலே யாரோ செருகிவிட்ட பொய்யுரை**யென வறிக.

7. தேவசுவாமியின் உடன்பிறந்தானான கரம்பகன் என்பானுக்கு யாளியென்பவன் மகனாவான். இவனை வியாடியென்றே கூறுப.

24—27. (சிந்துநாடன்............பெரிதே) சிந்து நாடன் செயத் திரதன் முடி இலங்கிலை வாளியின் இறுத்தோன் நிற்ப—சிந்து விஷயத்திற்குக்[1] கர்த்தாவான செயத்திரதனுடைய தலையை விளங்கா நின்ற இலைபோன்ற அம்பாலே அறுத்த அருச்சுனன் இறவாதுநிற்க; தவம்புரி தந்தை நிலம்புக எறிந்த தன்தலை—இச்செயத்திரதன் பிதாவாகிய விருத்தக்ஷத்திரன் "என் மகன் தலையைத் தரையில் விழவிட்டார் தலை சின்னபின்னப்பட்டுப் போகவேண்டு"மென்று [2]சமந்த பஞ்சக மடுவின்கண்ணே நின்று தவசுபண்ண, அவ்வருச்சுனன் தனது அம்புச்சரத்தாலே அச்செயத்திரதன் தலையைத் தரையில் விழாதே கொடுசென்று அவன் (விருத்தக்ஷத்திரன்) கையிலேயிட, அந்தத் தலையைக் கண்டு அருவருத்துப் பூமியிலே விழ எறிந்த அவ்விருத்தக்ஷத்திரன் தலை; தரைசேர் [3]அந்தரம் யாது—சின்னமாய்த் தரையில் வீழ்ந்த அந்தரமாகிய தீமை பிரகாசமாய்ப் பெரிதானதன்றோ;

---

1. வடநாட்டுக் கல்வெட்டுக்கள் அனைத்தும், வட பகுதியிலுள்ள நாடுகளை **விஷயம்** என்றே குறிக்கின்றன; ஒட்டியர் நாட்டை **ஒட்ட விஷயம்** என முதல் இராசராசன் மெய்க்கீர்த்தி கூறுவதும் பிறவும் இதற்குச் சான்றாகும்.

2. திரேதாயுகம் துவாபரயுகம் என்ற இரண்டுக்குமிடையில், பரசுராமர் கிலவேந்தரைக் கொன்று திரிகையில் "தம்முடைய பராக்கிரமத்தினால் க்ஷத்திரியர்களெல்லாரையு மழித்து ஸமந்த பஞ்சகமென்னுமிடத்தில் ஐந்து ரக்த மடுக்கள் உண்டாக்கினா" ரென்றும் "ரக்தமே ஜலமாக நிரம்பிய அந்த மடுக்களில் ரக்தத்தினாலேயே பிதிர்களுக்குத் தருப்பணம் செய்தா" ரென்றும், அவர் செய்கையை யுவந்து போந்த பிதிர்களை வணங்கி, நான் கோபத்தினால் மூடப்பட்டு க்ஷத்திரியர்களை யழித்ததாகிய இந்த பாவத்தினின்றும் விடுபடக் கடவேன்; என்னுடைய இந்த மடுக்களும் புண்ணிய தீர்த்தங்களாகப் பெற்றுப் பூமியிலிருக்கக் கடவன" என்றும் வேண்டிக்கொள்ள அவர் அங்ஙனமே வரந்தந்தனரென்றும், அதுவே காரணமாக அந்த மடுக்கள் உள்ள தேசமே பின்பு சமந்த பஞ்சகமென வழங்குவதாயிற்றென்றும் பாரதம் (ஆதி. அத்தி. 2) கூறுகிறது.

3. அந்தரம் யாது—அந்தரமாகிய தீமை யாதாயிற்று? உலகு முழுதும் நன்கறியப் பரவிற்றன்றோ என்பார் "பிரகாசமாய்ப் பெரிதான தன்றோ" என்று உரை கூறினர்.

28—30. (பாண்டவர்...............அன்றே) பாண்டவர் மரபின் ஆண்டகைக் குரிசில் சனமயன்—பாண்டவர்மரபிலே ஆண்டகைமைக்குத் தலைமையான சனமேசயனென்னும் பெயரையுடைய இராசன்; வேள்விக் குருமுனி உற்ற தன்மையும் நன்மையது அன்றே—செய்கின்ற யாகத்திலே ஆசாரியனாகிய முனிவனைச் செய்த [1]பிரமாதத்தாலே குருத்துரோகமான தன்மையும் நன்றுதெரிந்தனவல்லவோ;

30—32. (விண்ணோர்..............சேர்ந்தனனே) விண்ணோர் மகுடம் புனைந்த [2]நகுடன்—தேவர்கள் வணங்கும் இந்திரனாய் முடிசூட்டப்பட்ட நகுடன் என்னும் வேந்தன்; பாந்தள் படிவங்கொண்டு படிசேர்ந்தனன்—சத்த முனிவர்களைச் செய்த அவமதிப்பாலே [3]பெரும்பாம்பின் வடிவுகொண்டு பூமியிலே வீழ்ந்தானன்றே;[4]

33—35. (திருமணி..............உணரூங்காலே) திருமணி வள்ளத்து—அழகிய இரத்தினம் இழைத்த வட்டிலிலே; உயிர்மருந்து உதவிற்று—பிராணனுக்குக் காப்பாக அமிர்த சஞ்சீவியான மருந்து

---

1. பிரமாதம்—குற்றம். முனிவன் தூங்கிக்கொண்டே ஓமம் செய்வதைப் பார்த்த சனமேசயன் தன் கையிலிருந்த தருப்பையால் அவனைத் தட்டவும், அவன் தீக்கணுக் கண்டு மருண்டு ஓமகுண்டத்தே வீழ்ந்து இறந்தானென்று பாரதம் கூறுகிறது. குருமுனி என்பது போலாது அவனோர் எழைப் பிராமணனென்றே பாரதத்துட் காணப்படுகிறது.

2. நகுடன் ஆயுவென்னும் வேந்தனுக்குச் சுவர்ப்பானவி என்பாளிடம் பிறந்த மக்கள் அறவருள் முதல்வன் அறச்செய்கையின் பயனாய் "இந்திராதிகாரத்தைச் செலுத்தினான்" பாரதம் கூறுகிறது.

3. மலைப்பாம்பான வடிவு கொண்டு—உ. வே.

4. நகுடன் பாம்பாய்க் கெட்டழிந்த கதையைத் திரிகூடராசப்பக் கவிராயர், "சசிகாமம் பிடித்தலைப்பத் தலைகீழாக மகுடம்போய் வானகம்போய் வையகம்போய் அரசும்போய் மலைப்பாம்பாக நகுடன்போய் வீழ்ந்த கதையறியாயோ" (குற்று. மந்த. 37) என்பர். நகுடன், கொள்ளைக்காரர்களின் கூட்டங்களைக் கொன்று ரிஷிகளைக் கப்பங்கொடுக்கச் செய்தான்; அவர்களைப் பசுக்களைப் போல் முதுகில் தன்னைத் தூக்கச்செய்தான்" (வியாசபா. ஆதி. அத். 69) என்றே கூறுகிறது.

கூட்டித் தந்ததாயினும்; அடப்படு தெண்ணீரானும்—காய்ச்சித் தெளிந்த குடிநீரேயாயினும்; உணருங்கால்— அறிவுடையோர் விசாரிக்குமிடத்து; [1]உடற்பகை அற்று—உடலுக்குப் பகையாதும் [2]அத் தன்மையையுடைத்தன்றே; எ. று.

[3]ஆல், அசை. ஏகாரம், தேற்றம்.

## அகவல் 41

### பிராரத்த கன்ம சேதம்.

பழவினை [4]பயின்ற பழுதின் றயின்று
வருவினை தரூஉம் வாயி லறிவென்
கபாடச் செந்தாழ் கடாஅவ விடாஅ
துடைவ [5]தாயி னொழியாப் பாசத்
5. தொல்லை வல்வினை துகடபு காட்சி
செல்லா [6]துறுமதற் கெல்லை யாதெனின்
படைப்புப் பூண்ட வொருவர்க் கவையே

---

1. அற்ருல் என்ற பாடங்கொண்டு பூருவ புண்ணியமான கருமபலம், புசித்தற்ருல் அதுதானே உடலுக்குப் பகையாம் அறிவுடையோர் விசாரிக்குமிடத்து என்று உரை கூறிய பிரதியுமுண்டு.

2. இது, மாதவன் என்னும் பிராமணனுக்குத் தேவதத்தன் கொடுத்த பால் நஞ்சாய் இறப்பித்ததும், பிரமதத்தன் என்னும் வேதியனுக்கு விகிதசேனன் கொடுத்த தண்ணீர் உயிரிழத்தற்கேதுவாயினதும் ஆகிய வடமொழி கதாசரித்சாகரத்துட் கண்ட கதைகளையுட் கொண்டிருப்பது தெரிகிறது.

3. இவ்விலக்கணக் குறிப்பு அச்சுப்பிரதியில் இல்லை.

4. பயந்த—பா. வே.

5. துறந்த—பா. வே.

6. இக்கருத்தோடு, "அறிவாலே யறியாமை யழிகையாலே அணற்று நி செய்வினையாலே வினைபோ மாளுல், இறவாம லிவ்வாக்கை முன்பு போல விடரின்ப நுகருவதிற் கென்னை யென்னின், உறவாகக் காரணத்தை மீண்டொன்ருதே காரியமா யொழிவனவு மீண்டு மொன்றிப், பிறவாதே கிற்பனவு முளவியாக்கை பிறந்தபடியே பிரியு முன்பு கூடா" (குறுந். 376) என்று வருவதனையும் காண்க.

துடைப்புப் பூணு வெணைப்பல நிறத்த
மண்ணை நல்லான் வயிறுதர வந்த
வெண்ணெ யொண்பால் புண்ணியக் குழம்பு
மலைய சந்தின் கலைநவி லின்றுணி
நறுநெய் வெண்டயிர் நலங்கே ழொண்படி
மைந்தம னறுவிரைச் சந்தி னின்சே
ருசா வாறு போல [1]வாங்குப்
போகா தம்ம புராதன மாகந்
தொடநனி நிவந்த கொடிநுடங் காரெயில்
வைவேன் முதல மண்ணிரும் பாதற்
கைய மில்லாச் செய்தி யேய்ப்ப
உள்ளத் துள்ளிய வுருதற்
குள்ளத் துள்ள றள்ளுமதி விரைந்தே.

இது பிராரத்த கன்மம் [2]ஞானவுபாயத்தாற் கழியாது, அதை அனுபவித்தே கழிக்கவேண்டுமென்று கூறியது.

1—4. உரை: (பழவினை......................உடைவது) பழவினை பயின்ற-பூருவகன்ம பலத்திற் பக்குவப்பட்டவற்றை; [3]பழுதின்று

---

1. இக்கருத்தே "காரியமாவதன் முன்னு மான போதும் அழிபொழுதும் காரண ரூபமதாம் பித்தி, கூரியவேல் கிற்பதவுங் குழம்பு மாணுற் கோமலமாகா சந்தின் குழடு மாகா, சிரிய நெய் தயிர் வெண்ணெய் பாலுமாகா தெளியறிவாற் சிதையுமறி யாமையாகா, காரியமா மூடலெடுத்த கருமங் துய்த்துக் கழிதலா லறிவதனுற் கழிக்கிடாதே" (குறுந்தி. 377) என்று கூறப்படுதல் காண்க.

2. ஞானவுபாயத்தாற் கழியாதே அனுபவித் தொழிய வேண்டுமென்று சாதித்தது – பா. வே.

3. பழவினையின் பயன் புசித்தறுதற்குப் பக்குவப்பட்ட வழியே எஞ்சதலின்றி நுகரப்படுமாதலின், பழவினை பயின்ற என்றும் இக் நுகர்ச்சிக்கென்று உடல் வந்தமையின் இஃதுண்ணுது கழியாதென்றற்குப் பழுதின் றயின்று என்றும் கூறினர். "ஏன்ற வுடற் கன்மம் அனுபவத்தினுல் அறுத்து" (சிவ. சித். 8 : 10) என்றும், "ஏன்ற வுடற் பழவினைய தூட்டும்" (சிவப். 88) என்றும் சான்ருேர் கூறுதல் காண்க,

அயின்று—குற்றமறப் புசித்தற [1]வேண்டுமவையிற்றைக் குற்றமறப் புசித்த; [2]வருவினை தரூஉம் வாயில்—[3]சுயங்கன்மம் [4]வரும் வழிக்குப் பரிகாரம்; கபாடம் [5]அறிவு என் செந்தாழ் கடாவ விடாஅது

---

1. இத்தொடர் அச்சுப்பிரதியில் இல்லை.

2. பழவினைப் பயனை நுகருங்காற் செய்யப்படும் முயற்சியும் செய்கையுமே ஏதுவாக மேலும் வினையீட்டப்படுதலால், அவ்வாறு வினை யுண்டாகாமைக்கு நெறி கூறுதலின், **வருவினை தரூஉம் வாயில்** எனப்படுகிறது. "மேலைக்கு வித்துமாகி விளைந்தவை யுணவுமாகி, ஞாலத்து வருமாபோல நாம் செயும் வினைகளெல்லாம் ஏலத்தான் பலமாச் செய்யும் இதமகிதங்கட் கெல்லாம், மூலத்த தாகி யென்றும் வந்திடும் முறைமையோடே" (சிவ. சித். 2 : 11) என வருவது காண்க.

3. சுயங்கன்மம்—ஆகாமிய வினை.

4. வரும் மனுதி வாயில்களுக்கு—உ. வே.

5. அறிவென்னும் செந்தாழ் என்றதற்கேற்ப நிறையென்னும் கபாடமென இயைத்துக் கொள்க; அஃது ஈண்டு எஞ்சி நின்றது. கதவுக்குத் தாழ் இன்றியமையாமை பற்றி, "அறிவென் செந்தாழ்" என்றார்; "காழோன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ தாழொன் றில தாயிற்றுன்" என்று பிறசான்றோரும் கூறுதல் காண்க. மெய்யுணர்வு பெறுதலே சுயங்கன்ம முண்டாகாமைக்கு வாயிலாகும்; மெய்யுணர்வு பெற்றோர் எடுத்த வுடம்பளவாய பழவினைப் பயனை நுகருங்கால் சுயங்கன்ம முண்டாயின் அது ஞானப் பேற்றால் அழிந்துபோம் என்றற்கு, **அறிவென் செந்தாழ் கடாவ விடா துடைவது** என்றார்; இவ்வாறே சான்றோரும் "தொல்லையில் வருதல்போலத் தோன்றிருவினையதுண்டேல், அல்லொளி புரையு ஞானத் தழலுற வழிந்துபோமே" (சிவப். 89) என்றும், "செய்ய திருக்கண்ணருளானோக்கிக் கடியபிறப்பாற் பட்ட புண்ணும் இருவினையும் போயகல" (போற்றி. 74–5) என்றும், "இனிச் செய்கன்மம் மூலமலம் ஞானத்தால் இடிப்பன்" (சிவ. சித். 8–10) என்றும் கூறுவர். இப்பகுதிக்குரைகண்ட நிரம்பவழகியார், "கன்மங்களெல்லாம் போக்கியும் சரீரமிருக்கையாலே மீளவும் பிராரத்தமும் ஆகாமியமும் வாதனையாலே போகாதாகையால் அது போகைக்கு இவ்விடத்திலே மேற்செய்யப்பட்ட ஆகாமியத்தையும் அதற்கேதுவான ஆணவமலத்தையும் பரமசிவன் ஞானத்தினாலே இல்லையாக்குவன்" என்று கூறுவது ஒப்புநோக்குக.

உடைவது—[1]நிறை யென்னுங் கதவைச் சிவஞானமென்னும் அழகிய தாழாலே [2]யடைக்க அஃது [3]ஐயமறக் கெடும் என்று ஆசாரியன் அருளிச்செய்ய;

4—6. (ஆயின்......யாதெனின்) ஆயின்—அங்ஙனமாயின்; ஒழியாப் பாசத் தொல்லை வல்வினை—விடாத பாசமாய்ப் பந்தித்துக் கிடந்த பழையவாகிய வல்வினைகள்; துகள்தபு [4]காட்சி செல்லாது உறும்—[5]குற்றமற்ற ஞானமில்லாததினாலே நீங்காத கன்மமாய் எண்பத்துநான்கு நூறாயிர யோனிகளிலே செனித்தற்கு நிச்சயமுண்டாதலாலே; அதற்கு எல்லை யாது எனில்—[6]அவையிற்றை யான் புசித்தறும் எல்லை யாது? இதற்குப் பரிகாரமில்லையோ என்று நீ வினவில்;

7—8. (படைப்பு........திறத்த) படைப்புப் பூண்ட ஒருவர்க்கு—பூருவகன்மபலம் புசித்தற வேண்டுமென்ற இதற்கு இளைக்கவேண்டா, காண், [7]புசிக்கைக்காக முன்பே செய்துகொண்ட கன்மத்தையுடைய

---

1. சிவஞானமென்னுங் கதவை அழகிய தாழாலே—உ. வே.

2. வருவினை தரூஉம் வாயிலை நிறையென்னும் கபாடத்தான் மூடிச் சிவஞான மென்னுந் தாழிடுக; இட்டவழி, வினை வருமாறின்றிக் கெடும் என்பதாம்; "சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச், சார்தரா சார்தரு நோய்" (குறள் **359**) என்ற தமிழ்மறைப் பொருளை ஈண்டு நினைவு கூர்க.

3. ஆசற வொழியும்—உ. வே. ஆசு, பற்றுக்கோடு "ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ" (புறம் **235 : 16**) என்புழிப்போல.

4. காட்சி யென்புழி ஆலுருபு விகாரத்தாற் றொக்கது. மெய்யுணர் வெய்திய வழியும் பிராரத்த வினையைப் புசித்தற வேண்டியிருத் தலால், அஃது அறவே கெடுதற்கு உபாயம் வேண்டுமாறு தோன்ற, துகள்தபு காட்சி செல்லா துறுமதற்கு எல்லையாது எனில் என்றார்.

5. குற்றமற்ற ஞானத்தால் கெடாதே பக்குவப்பட்டுப் புசிக்கைக் கீடாக தாவர சங்கம யோனிகளிலே செனித்தற்கு நிச்சயமுண் டாக்குதலாலே—உ. வே.

6. இங்ஙனமாக வரும் இவையிற்றை—உ. வே.

7. உலகிற் பெருப்பான்மையும் செய்தார் செய்தன தம்மால் அழிக் கப்படுமாயிருக்க ஒருவரா லாக்கப்பட்ட பொருள்கள் அவரால் அழிக்கமுடி யாதனவாய் எத்துணையோ வர்க்கமுள—உ. வே.

[1] ஒருவருக்கு; அவையே தடைப்புப் பூண — [2] அவையிற்றில் அவரால் அழிக்கப்படாதனவாய்; எனைப் பல திறத்த—எத்துணையோ வர்க்கம் உள; ஆகலால், பூருவ கன்மபலம் உள்ள துணையும் புசித்தே தீரவேண்டும் என்று அறிவாயாக; [3] அஃது எங்ஙனமென்னில் அதற்குத் திட்டாந்தம்:—

9—15. (மண்ணை ......புராதனப்) [4] பண்ணை நல்லான் வயிறு தர வந்த—அழகையும் குணத்தையுமுடைய பசுவினிடத்[5] துண்டாகி வந்த; [6] நறுநெய் வெண்ணெய் வெண்தயிர் ஒண்பால் நலங்கேழ் ஒண்பொடி புண்ணியக் குழம்பு ஆகாவாறு போல—நறுநெய்

---

1. பிராத்தவினைப் புசிப்புக்காக உடம்பெடுத்த ஒருவர் அவ்வுடம்பால் அதனைப் புசித்த லின்றியமையாதென்பார், படைப்புப்பூண்ட ஒருவர்க் கென்றார். எனவே, நிலமேனின்ற மரம்போல அவர் வினைமேல் நிற்குமாறு பெற்றாம். "துறப்பார்மன் துப்புரவில்லார் உறற்பால வூட்டா கழியு மெனின்" (குறள் 378) என்று சான்றோர் கூறுதல் காண்க.

2. அவையிற்றில்—அக்கன்மங்களில்.

3. இவ்வினைகட்கு முதல் அவரேயாக, செய்த அவரே அவற்றை நுகராது கழிதல் கூடுமாதலின், அவற்றை நுகர்ந்தே கழித்தல் வேண்டும் என்பது எங்ஙனம் எனில் என்பதாம். இதனை முன்னைப் பிறவிற் செய்யப்பட்டு இம்மையிற் பிரார்த்தமாய்ப் பக்குவப்பட்டு வந்த வினைப்பயன் அவரால் கழிக்கப்படாதென்பதைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களால் விளக்குகின்றார்.

4. "நுதிமுக மழுகிய மண்ணைவெண் கோட்டுச் சிறுகண்யானை" (அகம். 24) என்பதன்கண், "மண்ணை வெண்கோடு மழுமட்டையான கோடு" என்பர் பழையவுரைகாரர். இப்பொருண்மை "நுதிமுக் மழுகிய" என்பதனாலே விளங்குதலின், இவ்வுரைகாரர் கூறும் பொருள் சிறப்புடைத்தாதலறிக.

5. துண்டாகியவற்றில்—உ. வே.

6. நறுநெய் வெண்ணெயாகாதவாறுபோல; வெண் தயிர் ஒண்பால் ஆகாவாறுபோல; நலங்கே ழொண்பொடி புண்ணியக் குழம்பு ஆகாவாறுபோல என இயைத்துக்கொள்க. இந்நூலாசிரியர் ஆக

[1]வெண்ணெயாகாதவாறு போலவும், வெண்மையையுடைய தயிர் இனிய பாலாகாதவாறு போலவும், அழகிய ஒளியையுடைய திருநீறு [2]சாணிக் குழம்பாகாதவாறு போலவும்; மைந்து அமல் நறு விரைச் சந்தின் இன்சேறு—[3]அழகு நிறைந்த நறுநாற்றத்தையுடைய இனிய சந்தனக்குழம்பு; கலை நவில் மலைய சந்தின் இன் துணி—[4]சாத்திரங்களிலே புகழ்ந்தோதப்பட்ட பொதிகைமலையில் உண்டான நறிய சந்தனக் குறடு; ஆகாவாறு போல—ஆகாதவாறு போலவும்; ஆங்கு

---

மங்களை நன்குபயின்றவராதலின், ஆவிடத்துப் பெறுவனவற்றைத் தீவிய செஞ்சொற்களாற் சிறப்பித்துக் கூறுதல் காண்க; "பாவுங் கலைகளாகமநூற் பரப்பின் தொகுதிப் பான்மையினால், மேவும் பெருமையருமறைகள் மூலமாக விளங்குலகில், யாவுந்தெளிந்த பொருணிலையே யெய்த வுணர்ந்த வுள்ளத்தால், ஆவின் பெருமை யுள்ளபடி யறிந்தார் ஆயர்க்கருள் செய்வார்" (பெரியபு. சண். 18) எனவருவது காண்க.

1. வெண்ணெயென்புழி வெண்மை நிறப்பண்பேயன்றி, மணமின்மையும் குறித்து நின்றது.

2. சாணகச் சாறாகாதவாறு போலவும்—உ. வே. வேள்வி முதலிய வைதிக காரியங்கட்குத் தூய்மை செய்யும் பொருளாகத் திகழ்தலின், சாணிக் குழம்பைப் புண்ணியக்குழம்பு என்றார்.

3. வலிதாகிய அழகு நிறைந்த—உ. வே.

4. நூல்கள் பலவும் பொதியமலையிற் பிறந்த சந்தனத்தையே சிறப்பித்துக் கூறுதலின், "கலைநவில் மலைய சந்து" என்றார்; "தன்கடற் பிறந்த முத்தினாரமும்......தன்மலைத், தெறலருமரபிற் கடவுட் பேணிக், குறவர் தந்த முத்தினாரமும், இருபேராரமும் எழில்பெற வணியும், திருவீழ் மார்பிற் றென்னவன்" (அகம். 13) என்றும், "மன்னுயிரறியாத் துன்னரும் பொதியில், சூருடையடுக்கத் தாரம்" (குறுந். 376) என்றும், "தென்மலைப் பிறந்த சந்தனம்" (சிலப். 4–38) என்றும், "தென்வரைப் பொதியி லார மகிலொடு தேய்த்த தேய்வை" (சீவக. 2187) என்றும், "அந்தண்பொதியிற் சந்தன மரமும்" (பெருங். 1 : 58 : 30) பொங்கு மழைதவழும் பொதியின் மீமிசைச், சந்தனச்சோலை (பெருங். 3 : 2 : 184–5) என்றும் தமிழ்நூல் பலவுங் கூறுதல் காண்க.

புராதனம் போகாது—அச்சரீரத்தில் பிராரத்தமாகி வந்த பூருவ கன்மம் [1]புசித்தல்லது தீராது[2].

15—20. (மாகம்....................விரைந்தே) மாகம் தொட நனி நிவந்த கொடி நுடங்கு [3]ஆரெயில் முதல—சுவர்க்கத்தைக் கிட்ட மிகவுயர்ந்த கொடியசையும் சிறந்த மதில் முதலாகவுள்ளன; மண் ஆதற்கு—மண்ணுதற்கும்; [4]வைவேல் முதல இரும்பாதற்கும்—கூர்மையுடைய வேல் முதலாகவுள்ளன இரும்பாதற்கும்; ஐய மில்லாச் செய்தி யேய்ப்ப—[5]ஐயமில்லையாம், அச்செய்தியை யொப்ப; [6]உள்ளத்து உள்ளிய உருதற்கு—முற்பவங்களினும் [7]இப்பவத்தில்

---

1. புசித்தற வேண்டும்—உ. வே.

2. இக்கருத்தையே, "காரியமாவதன் முன்னுமானபோதும் அழி பொழுதும் காரண ரூபமதாம் பித்தி, கூரியவேனிற் பதுவும் குழம்பு மாறுற் கோமல மாகாசத்தின் குறடுமாகா, சீரிய நெய் தயிர் வெண்ணெய் பாலுமாகா தெளியறிவாற் சிதையுமறி யாமையாகா, காரியமா முடலெடுத்த கருமந்துய்த்துக் கழிவதனு லறிவதனுற் கழிந்திடாதே" (குறுந்தி. 377) என்று பிறரும் கூறுதல் காண்க.

3. பகைவர் கொள்ளமுடியாதவாறு பல்வகைப் பொறியும் காப்பு மமையப்பெற்று அருமை மிக்கிருத்தல்பற்றி, ஆரெயில் என்றார்.

4. வேந்தரது இருப்பிற்கு எயிலும், மேற்சென்று பொருதற்கு வேலும் சிறந்தமையின் இவ்விரண்டையே ஈண்டு ஆரெயின் முதல வென்றும், வைவேன் முதல வென்றும் எடுத்தோதினர். "ஆற்று பவர்க்கு மரண்பொருள் அஞ்சித்தற், போற்றுபவர்க்கும் பொருள்" என்றும், "வேலன்று வென்றி தருவது மன்னவன் கோலதூஉங் கோடா தெனின்" (குறள். 741, 546) என்றும் கூறுவதனுலறிக.

5. ஐயமில்லாத செய்தியைப்போல—உ. வே.

6. எனவே, மேலே கூறிய வெண்ணெய், ஒண்பால் முதலியன நெய் யாகவும் தயிராகவும் பக்குவப்பட்டவழி மீட்டும் பக்குவப்படாத வெண்ணெயாகவும் பாலாகவும் மாற்றமுடியாதவாறுபோல, புசித் தற்குப்பக்குவப்பட்டுவந்த பிராரத்த கன்மம் மாற்றமுடியாதென்ற தனுல், பக்குவப்படாத கன்மம், எயிலும் வேலும் போல மாற்றப் படும் என்பது பெறப்பட்டது.

7. இப்பவத்திற் சாதிப்பதற்கு முன்பும் அகங்கரித்துக்கொண்டு-உ.வே.

[1]சற்குருகடாக்ஷிப்பதற்கு முன்பும் யான் எனதென்று அகங்கரித்துக் கொண்டு [2]புத்திதத்துவத்திலே பந்தித்துக் கிடந்த கன்மம் நீங்குவதற்கு; உள்ளத்து உள்ளல் விரைந்து தள்ளுமதி—[3]மனத்தால் ஆர்ச்சித்து அகங்கரித்துக் கொள்ளுமதை உபதேசத்தாலே விரைய அறிந்து விரத்தி கொண்டு கன்மச் சேதம் பண்ணிக்கொள்க[4] எ. று.

---

1. சற்குரு கடாக்ஷமாவது ஞானகுருவால் தீக்கை செய்யப்படுதல். தீக்கை கன்மங்களை நாசம் செய்வதென்று சுவாயம்பு ஆகமம் கூறுகிறது. "கிரணாகமத்திலும் யாதொரு பிராரத்த கன்மத்தால் அநேகம் பிறவிகளில் ஆன்மாக்களால் சம்பாதிக்கப்பட்ட கன்மமும் (சஞ்சிதமும்), வருங்கன்மமும் (ஆகாமியமும்), தீக்கையால், வறுக்கப்பட்ட வித்துப்போல் தடைசெய்யப் பெற்றிருக்கின்றனவோ, அந்தப் பிராரத்தகன்மம் போகானுபவத்தால் நசிக்கின்றதெனக் கூறப்பட்டிருத்தல் காண்க" என்பர் அகோர சிவாசாரியார் (இரத். சூ. 165 உரை).

2. சித்தத்திலே பந்தித்துக் கிடந்த—உ. வே.

3. தன்னாற் பிறர்க்கும் பிறரால் தனக்கும் செயலில்லாத இதனை அஞ்ஞானத்தாலே செயலுண்டென்று மனத்தால் அகங்கரித்தார்ச்சித்த இத்தனையே யென்று உபதேசத்தாலே யறிந்து விரைந்து கன்மச் சேதம் பண்ணிக்கொள்க—உ. வே.

4. உள்ளத்தால் ஒன்றனையுள்ளுதலும் வினையாதலினாலும், வினை உரைசெயல்கட்கும் அது காரணமாதலாலும், உள்ளத்துள்ளிய என்றும், உள்ளத்துள்ளியதொன்றை வெளியிடுவதனையும் உகுதல் வாய்பாட்டாற் கூறுதல் மரபாதலின், உகுநற் றென்றும் கூறினார்; "யாண்டும் உகாஅமை வல்லதே யொற்று" (குறள். 585) என்று சான்றோர் வழங்குமாறு காண்க. உபதேசத்தால் பாஞானம் பெற்றுப் பரமே பார்க்கும் இயல்புண்டாதலின் கன்மச்சேதம் நிகழ்வதுபற்றி, "உபதேசத்தாலே விரைய அறிந்து விரத்தி கொண்டு கன்மச் சேதம் பண்ணிக்கொள்க" என்று உரை கூறினார்; "உபதேச மந்திரப் பொருளாலே, உனை நான்நினைந் தருட்பெறுவேனோ" (திருப்புகழ். 106) என்று அருணகிரியாரும் "பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்" (சிவ. சித்தி. 11 : 2) என்று அருணந்தி சிவனாரும் கூறுதல் காண்க. "பதார்த்தங்கள் பாரார்" என்றது விரத்தி.

இது [1]பக்குவப்படாதே கிடந்து கன்மச்சேத வுபாயத்தாலே நீங்கும் கன்மத்திற்குத் திட்டாந்தம்.

[2]ஆகாவாறு போல என்பதை எங்குங் கூட்டிக்கொள்க. அம்ம, மதி—அசை.

அகவல் 42

## ஞானசித்தரின் அந்தரங்க வேறுபாடு.

மறைமுறை யுணர்ந்த வறிவின் கிழவரும்
மம்ம ரெய்திய மடவ மாந்தருங்
கைதொடல் கண்படை வெய்துறு பெரும்பயங்
களிபடு காமத் தளிதலை மயங்கிய
தகுதியல்லது பகுதி யின்றெனிற்
கேளினி வாழி கெடுகநின் வைலங்
கொய்தளி ரன்ன குலக்கோ மளத்தை
மெய்யுற முயங்கி விடனு யினனே
கொம்மை வெம்முலைத் தன்மகட் டழீஇ
[3]அம்முலை நல்கிய யாயென வுவந்தனன்
மற்றுங் கேண்மதி முட்டாட் டாமரை
நுண்டாது பொதிந்த [4]செந்தோ டன்ன
செங்கை கொங்கைக் கருங்கண் டைவர
மைந்த னென்ன மனமகிழ் புருகிப்
பெருவரை கான்ற சிறு வெள்ளருவியிற்
சொரித லானு பாலே யவையே

---

1. அமைத்த கன்மமாய்—உ. வே.

2. இது அச்சுப்பிரதியில் இல்லை.

3. அம்மநல்கிய—பா. வே.

4. செவ்வேடன்ன—பா. வே.

ஆடவன் வருட வறிவுபிறழ் வெய்தி
[1]மெய்புகு வன்ன கைகவர் முயக்கமொடு
இன்ப வெள்ளத் தன்பியைந் தாஅங்
[2]கறங்கரை நாவி னன்றோ ருள்ளஞ்
சிறந்தன்று மன்னோ தெரியுங் காலே.

இது ஞானசித்தர்க்குப் பாகிய வேறுபாடில்லை யாயினும் [3]அபி யந்தர வேறுபாடு உண்டென்று சொல்லியது.

1—5. உரை: [4]*மறைமுறை அறிந்த அறிவின் கிழவரும்*— *ஆகமத்திற் சொல்லுகிற முறைமையை யறிந்த* [5]*ஞானவான்களும்;*

---

1. அகம் 11.

2. ஞானு. அக. 24 : 43.

3. அந்தரங்க வேறுபாடு—பா. வே.

4. மறையெனப் *பொதுப்படக் கூறினாராயினும் அதன் தெளிவாம் சிறப்புடைய சித்தாந்தமாகிய ஆகமமே பொருளாயிற்று;* "*வேதஸார ஶிவந் தந்த்ரம் ஸித்தாந்தம் பரம் ஸூக்ஷ்மம்*" என்று மகுடாகமம் *கூறுகிறது.* "*சித்தாந்த மென்னுஞ் சொல்லானது பங்கஜம் முதலிய சொற்களைப்போல் காரண விடுகுறியாய்ப் பரம சிவனால் அருளப்பட்ட காமிக முதலிய இருபத்தெட்டாகமங்களுக்கும் பிரசித்தமான உரிமையுடையது*" (இரத். 10. உரை) என்ப. இனி, *வேதவொழுக்கம் உலகியலுக்கும் ஆகமவொழுக்கம் சிவப் பேற்றுக்கும் உரியவாதலின்,* மறையென்றது *ஆகமமென்றும்* முறையென்றது *வேதமென்றும் கொள்ளினும் அமையும்;* "*உலகியல் வேதநூ லொழுக்க மென்பதும், இலகுமெய்ந் நெறி சிவநெறிய தென்பதும்*" (பெரியபு. ஞானசம். 820) என்று *சான்றோர் கூறுதல் காண்க. இக்காலத்து வெளியாகியிருக்கும் வேதங்களை நோக்க, ஏனையுபநிடதங்களும் ஆகமங்களும்போல அவை உலகியலுக்கும் சிவநெறிக்கும் சிறப்புடையவல்லவாய்க் காணப்படுதலின்,* மறையென்றது *ஆகமங்களையேயென்று கோடல் சீரிதாம்.*

5. மறைமுறை யறிந்த ஞானவான்கள் *என்றதனால் ஆகமஞானமே யன்றி அனுபவஞானமும் ஒருங்குடையரென்பது* உபலக்கணம்.

[1]மம்ம ரெய்திய மடவமாந்தரும்—மயக்கமுறுகிற அஞ்ஞானிகளும்; கைதொடல் கண்படை வெய்துறு பெரும்பயம் களிபடு காமத்தளி—ஆகாரம் நித்திரை நடுக்கம் பொருந்திய பெரிய பயம் ஸ்திரீபோக [2]மயக்கத்தைத் தரும் மைதுனமென்ற இவையிற்றில் அளியராய்; தலைமயங்கிய தகுதியல்லது பகுதி இன்று எனில்—தலைத்தலை மயங்கும் முறைமையல்லது அவ்விருவருக்கும் வேறுபாடு கண்டதில்லை யென்னில்;

6. (கேள்..........அவலம்) கேள்—கேட்பாயாக; இனி நின் அவலம் கெடுக—இனி நின் அஞ்ஞானம் கெடக் கடவதாக;

7—8. (கொய்தளிர்.......விடனுயினனே) கொய்தளிர் அன்ன குலக் [3]கோமளத்தை—கொய்யப்பட்ட மாந்தளிரை யொத்த நல்ல வங்கிசத்திலே பிறந்த இளமையையுடைய மனைவியை; [4]மெய்யுற முயங்கி விடனுயினனே—சரீரத்திலே பொருந்தப் பரிசித்து விடயபரனுயினுனெருபுருடன்;

9—10. (கொம்மை..........உவந்தனன்) [5]கொம்மை வெம்முலை தன்மகள் தழீஇ—திரட்சியையுடைய விரும்பப்பட்ட முலையையுடைய தன் மகளைத் தழுவி; அம்முலை நல்கிய யாய் என—[6]அழகிய

---

1. மடவ மாந்தர்பால் நிகழ்வது மயக்கமே யாகலின், மம்மரெய்திய எனத் துணிந்து கூறினர்.

2. சந்தோடத்தைத் தரும் மைதுனம் இந்த நான்கினுக்கும் விருப்பத்தோடு—உ. வே.

3. கோமளம்—இளமை; ஈண்டு ஆகுபெயராய் அதனையுடைய மனைவிமேல் நின்றது; தளிர் அன்ன மனைவியை என இயையும்; "மாவின் அவிர்தளிர் புரையும் மேனியர்" (முருகு 143-4) என்பதனல், மாந்தளிரை யுரைத்தாரென வறிக.

4. உள்ளப்புணர்ச்சியை நீக்கி மெய்யுறு புணர்ச்சியை யுணர்த்துதற்கு மெய்யுற முயங்கி யென்றார். விடன் என்றற்கு "விடயபரனை புருடன்" என்று உரைகூறும் திறமறிக.

5. "கொம்மை வெம்முலைக் கோற்றெடிக் கொடிச்சியை" (தணிகைப் புரா. 1) என்பதனல் கொம்மை இப்பொருட்டாதலறிக.

6. அம்முலைப்பாலைத் தந்து—உ. வே.

தனங்களாலே பாலைத் தந்து வளர்த்த தாயே என்று; உவந்தனன்—[1]பிரியமானவாறு போலவும்;[2]

11. மற்றும் கேண்மதி—இன்னமும் கேட்பாயாக;

11—16. (முட்டாள்...........பாலே) முள்தாள் தாமரை நுண் தாது பொதிந்த செங்தோடு அன்ன [3]செங்கை—முள்ளுண்டான தண்டினையுடைய தாமரையின் நுண்ணிய தாது பரந்த செவ்விதழை தன்மகனான குழவியின் [4]செங்கை; கொங்கைக் கருங்கண் தைவர—முலையின் கரிதாகிய கண்ணைத் தடவ; மைந்தன் என்ன மனம் நெகிழ்பு உருகி—தாய் தன் மகனென்று மனம் நெக்குருகுதலால்; பெருவரை கான்ற சிறுவெள்ளருவியின்—பெரிய மலையினின்றும் விழப்பட்ட நுண்ணிய வெள்ளருவிபோலே; பால் சொரிதல் [5] ஆனா—அம்முலைகள் பால் சொரிதலை அமையாதனவாயிருந்தன;

16—19. (அவையே....... ....இயைக்தாங்கு) அவையே—அத்தன்மைய வான முலைகளையே; ஆடவன் வருட—அவள் நாயகனான

---

1. அன்புடையனானவாறு—உ. வே.

2. "குணங்க ளன்குமுண் டெனினுமுக் குற்றமன் னுளத்தி, லுணர்ந்த ஞானிக ளுள்ளம் வேறுகு மென் றுணர்க, மணந்த மாதினைத் தழீஇ மன மயக்க முற்றவனே, அணைந்த தன்மகட் டழீஇ யீன்ற வன்னை யென் றுணர்ந்தான்" (குறுந். 43) என்று பிறரும் கூறுதல் காண்க.

3. "நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத், தாதி னல்லி யவிரிதழ் புரையும், மாசில் அங்கை......புதல்வனை" (அகம். 16) எனச் சான்றோர் கூறுதல் காண்க.

4. குழவியின் செங்கையைத் தாமரையின் செந்தோடொப்பதெனச் சிறப்பித்துக் கூறியது, தாயின் கொங்கைக் கருங்கண்ணைத் தைவந்த மாத்திரத்தே அத்தாயின் உள்ளத்தே அன்பைப் பெருக எழுப்பிப் பாலைச் சொரிவிக்கும் சிறப்புக் குறித்து.

5. செங்கை, தைவர, மனம் நெகிழ்பு உருகுதலின், அருவியின் பால் சொரிதலானா என்றியையும். தடையின்றிப் பீறிட்டுக்கொண்டு சொரிதலின், பெருவரை கான்ற சிறு வெள்ளருவியைக் கூறினர்.

புருடன் வருடிய வழி ; அறிவு பிறழ் வெய்தி—[1] அறிவுமயங்குதலின்; மெய்புகுவன்ன கைகவர் முயக்கமொடு—[2] இருவரும் ஒருவர் சரீரத்துள் ஒருவர் சரீரம் புகுந்து ஒன்றாயின தன்மை போலக் [3] கையாற் கவர்ந்து இறுகத் தழுவிக் கொள்ளும் முயக்கத்தோடே ; [4] இன்ப வெள்ளத்து அன்பு இயைந் தாஅங்கு—காமவின்பமாகிய போக சமுத்திரத்திலே அன்பால் கலந்து அழுந்தின [5] தன்மைபோலவும் ;

20—21. (அறங்கரை..............தெரியுங்காலே) [6] அறங்கரை நாவின் ஆன்றோர்—[7] தருமத்தையே வசனிக்கின்ற நாவையுடைய ஞானவான்கள் ; உள்ளம் தெரியுங்கால்—உள்ளத்தேயிருக்கும்படியை

---

1. அறிவுகெட்டு—உ. வே. குழவியின் செங்கை வருடியவழித் தாயின் மனம் நெகிழ்புருகியதே யன்றி அறிவு பிறழ் வெய்தியதில்லை; ஆடவன் வருடுங்கால் அறிவு மயங்குதலின், அவன் கையினை விதந்தோதாராயினர்.

2. இருவர் சரீரமும் ஒன்றாய தன்மைபோல—உ. வே.

3. கையைக் கவர்ந்து—உ. வே.

4. இப்பகுதி, "ஆனந்த வெள்ளத் தழுந்துமோ ராயி ரீருருக்கொண், டானந்த வெள்ளத் திடைத்திளைத் தாலொக்கும்" (305) என்ற திருக்கோவையாரையும் அதனுரையையும் நினைப்பித்தல் காண்க. பட்டினத்தாரும் இன்பத்திடை அன்பாற் கலத்தலை வற்புறுத்தி, "இன்ப சுகந்தரு மன்பு பொருந்தி" (உடற். வண்.) என்பர்.

5. இத்தன்மையை, "பருகுவன்ன காதலொடு திருகி, மெய்புகு வன்ன கைகவர் முயக்கத்து, ஓருயிர் மாக்களும்" (அகம். 305) என்று சான்றோர் கூறுப. அறிவு பிறழ்ந்தமையின், ஓருயிர் மாக்கள் என்பது குறிக்கத்தக்கது.

6. நாவிற்கு விளக்கம் அறங்கூறுதலே யாதலின், அறங்கரை நா என்றார் ; பிறரும் "அறந்திகழ் நாவின் அந்தணன்" (மணி.) என்றல் காண்க.

7. தருமசாத்திரங்களை அநந்தரம் ஓதிக்கொண்டிருக்கும் நாவையுடைய—உ. வே.

விசாரிக்குமிடத்து; சிறந்தன்று—[1] அந்தக் கரண சுத்தியால் வேறு பட்டிருக்கும், எ. று.

என்றது, [2] ஞானவான்களின் உள்ளமானது விசாரிக்குமிடத்து அவரது அந்தக் கரண சுத்தி பிறர்க்குத் [3] தெரியவாராது வேறு பட்டுக் காண் இருப்பது என்றவாறு.

வாழி, ஏ, மதி, மன், ஒ, அசை.

## அகவல் 43

## ஞானவான்களின் அந்தரங்க சுத்தி

அரும்பவிழ் கழுநீ ராயித ழன்ன
கருங்கய னெடுங்கண் விடங்கிளர் வாளியர்
முடங்குமதி யணிந்த முழுநீர் முத்தின்
நுடங்குநுத லிளவே ரிடங்கெட வணிய
ஒடுங்குநிமிர் புருவக் கொடுஞ்சிலை துரப்பினும்

---

1. அந்த ஞானிகளின் அறிவு வேறுபட்டுக்காண் இருக்கும்—உ. வே. அப்பியந்தர சுத்தியால்—உ. வே.

2. இவ்வாறே, "பிறரறிவால், தெரிதக்கிட வரிதாய்வகை திரியுந் தெரிவுறுதற், கரிதென்றரு மறையோதிய தறிவாசற வறிவான்" என்று (குறுந். 47) பிறரும் கூறுதல் காண்க. இனி, அருணந்தி சிவனார், இந்த ஞானவான்களின் இயல்பை, "தேசமிடங் காலந்திக் காசனங்களின்றிச் செய்வதொன்று போற் செய்யாச் செயல தனைச் செய்தல், கூசல்படு மனமின்றி யுலாவல் நிற்றல், உறக்க வுண்டி பட்டினியிருத்தல் கிடத்தல், மாசதனில் தூய்மையினில் வறுமை வாழ்வில் வருத்தத்தில் திருத்தத்தில் மைதுனத்தில் சினத் தில் ஆசையினில் வெறுப்பிலிவை யல்லாது மெல்லாம், அடைந் தாலும் ஞானிகள்தாம் அரனடியை யகலார்" (சிவ. சித். சூ. 8:33) என்பது காண்க.

3. இவ்வாறே வடமொழி நூல்களும், "[illegible]" என்று கூறுகின்றன.

சுரும்புதுரந் தமைத்த திருந்து மலரமளிப்
பருந்துபசி தணிக்குந் திருந்திலை நெடுவேல்
மைந்துடை மைந்தன் சிந்தை கனற்றக்
கன்றிய தின்றெனிற் காம மின்றே
[1]அதனுல், அகாம னன்றே நாம வேலோன்
முட்புற முதிர்கனிப் பொற்சுளை மைக்கொள்
கதலித் தீங்கனி யிதலூன் பொரியல்
வாளைப் பீலி [2]மீளிக் கயற்றுணி
கறிச்சேறு கமழு மறிக்கோ ழூன்றுவை
பீலி முருந்தி னிவந்த சாலி
வெண்சோறு குவைஇய குன்றிற் றண்டா
நறுநெய் யருவியி[3]னிரிய வெள்ளயிர்க்
குறுமுறி [4]யடுக்கிய நெடுமாக் கோட்டினும்
மண்ட மரட்ட [5]வலிகெழு திணிதோள்
உண்டி விருப்பி [6]லொருவ னின்றும்
கண்டன னேனுங் கொண்ட தெனுளத்தே
உள்ளந் [7]தெள்ளாத் தெள்ளிய காட்சியொ
டுள்ளவும் படுவ துளதோ வள்ளிய
கங்கைப் பேரியாற்றுப் பொங்குதிரைத் தீநீர்

---

1. இத் தனிச்சீர் அச்சுப்பிரதியில் இல்லை.
2. காலைக் கயற்றுணி—பா. வே.
3. யீர்ப்ப—பா. வே.
4. யடுக்கி—பா. வே.
5. மணிகெழு திணிதோன்—பா. வே.
6. னொருவ—பா. வே.
7. இத் தெள்ளாத் தெள்ளிய வென்பது "தெள்ளிய தெள்ளா" என அச்சுப்பிரதியில் மாறி நிற்கின்றது.

ஒன்ருெழி பின்றிச் சென்றளப் பரிய
மேருக் குன்றச் சிகர நீர
மண்கொடு மறலி வடிவாய்க் கணிச்சிக்
குண்பய னுதவு காறும் பண்பட
மாசற [1]மண்ணினு மாசற நிவந்த
உள்ளமு முளதுகொ லுரவ வொள்ளிய
ஞானப் பாணி வானத் துறைஞரும்
விழையும் [2]விழைவிலென் ருகடர் மாமண்
[3]அறிவர லவாஅச் செறிமல வுவர்நீர்
மன்றன் மாசற மண்ணல்
என்றன ரம்மல மொன்றி லோரே.

இஃது இன்னும் ஞானவான்களுக்கு அந்தரங்க வேறுபாடும் அந்தரங்க சுத்தியும் உண்டென்று சொல்லியது.

1—2. உரை : (அரும்பு..............வாளியர்) அரும்பவிழ் கழுநீர் [4]ஆயிதழ் அன்ன—[5]அரும்பி யலர்ந்த செங்கழுநீர்ப் பூவின்

---

1. மண்ண பா. வே.

2. விழைவி ருகடர்—பா. வே.

3. அறிவறி வாராஅச் செறிமல —பா. வே.

4. அரும்பலர்ந்த—உ. வே.

5. ஆய்தல் ஈண்டு மென்மை மேற்று; "ஆயிதழ்த் தண்ணறுங் கழுநீர்" (மதுரை. 550) எனவருதல் காண்க. காமவேட்கையால் வெதும்புங்காற் சிவந்து தோன்றும் கண்கட்குக் கழுநீர் ஏற்ற உவமையாதல்பற்றி, அரும்பவிழ் கழுநீர் ஆயிதழன்ன என்ருர். அரும்பவிழ் கழுநீர் எனவே தேன் நிறைந்திருத்தல் பெற்ரும்; ஆகவே; அதுபோன்ற கண்ணுடையாள் உள்ளத்தே காமவேட்கை நிறைந்திருக்குமாறறிக. இதனை "உள்ளக நறுந்தா துறைப்ப மீதழிந்து, கள்ளுக நடுங்குங் கழுநீர் போல" (சிலப். 5 : 235–6) என்பதற்கு அடியார்க்கு நல்லார் உரைக்கும் உரையாலுமறிக.

[1]மெல்லிய இதழ்போன்ற நிறத்தையும்; [2]கயல் கரு நெடுங்கண்—கயல் மீன் போன்ற பிறழ்ச்சியையுடைய கரிய நெடிதாகிய [3]கண்ணென்னும்; விடம் கிளர் [4]வாளியர்—[5]விடம் திற்றப்பட்ட [6]அம்பையுடைய மாதர்கள் ;

3—4. (முடங்கு...............அனிய) முடங்குமதி அணிந்த—முடங்கியிருக்கப்படாநின்ற இளம் பிறையிலே; முழுநீர் முத்தின்—[7]முழுத்த நீர்மையையுடைய முத்தை நெருங்க அணிந்தாற்போல; நுடங்கு நுதல் இளவேர்—நுடங்கிய நெற்றியிலே வேர்வைத் துளியானது; இடம் கெட அணிய—[8]இனி இடமில்லை என்னும்படிக்கு நெருங்கப் பொடிப்ப ;

5. (ஒருங்கு..............துரப்பினும்) ஒடுங்கு நிமிர்புருவம்—பக்கத்தே ஒடுங்கி உயர்ந்த புருவமாகிய; கொடுஞ்சிலை [9]துரப்பினும்—

---

1. அழகிய—உ. வே.
2. கருங்கயல் நெடுங்கண் எனக் கிடந்தவாறே கொண்டு, பெரிய கயல் மீனைப் போன்ற நெடிதாகிய கண்ணென வுரைத்த உரைவேறுபாடு முண்டு.
3. மைபுண்டல் கண்ணிற் கியல்பாதலின், கருங்கண் என்றொன்றுமாம் ; "கழுநீ ருண்கண் கடையி னோக்கி" (பெருங். 1 : 4 : 43) என வருதல் காண்க.
4. கண்ணாகிய அம்பினாலே ஆடவர் நெஞ்சைப் போழ்ந்து வேட்கைப் போர் விளைத்தல்பற்றி, நெடுங்கண் வாளியர் என்றார்.
5. நச்சம்பையுடைய மாதர்கள்—உ. வே.
6. அம்புக்கு நுனியில் நஞ்சு தோய்த்தல் மரபு; "நச்செயிற்றம்பு தின்ன நாளிரை யாகலுற்றார்" (சீவக. 2303) என்று தேவரும் கூறுவர்.
7. முழுமணியாகிய முத்தை—உ. வே.
8. இடமறப் பொடிப்ப—உ. வே.
9. "பூவுண்ட கண்ணாள் புருவச்சிலை கோலி யெய்ய, ஏவுண்ட நெஞ்சு" (சீவக. 1965) என்பதனால், புருவநெரிப்புக் காமக்குறிப்பாதல் பெறப்படும்; காமக்கூட்டத்தை வேண்டி, அதனைப் புருவநெரித்து நோக்கும் பார்வையால் வெளியிடுவதுபற்றி, ஒடுங்குநிமிர் புருவம் கொடுஞ்சிலை துரப்பினும் என்றார். தேவரும் "ஏசீ ரிருபுருவம், ஏறி யிடைமுரிந்து நுடங்கப் புல்லி" என்றாராக, "ஏசீர் இருபுருவம், மேல்தன்னைப் புணர்ச்சியிலே ஏவுகின்ற புருவம்" என்று நச்சினார்க்கினியார் உரைப்பது காண்க (சீவக. 1354 உரை).

வளைந்த சிலையிலே இந்தக் கண்ணென்னும் அம்பை ஏறிட்டெய்தாலும்;

6—10. (சுரும்பு ......... அன்றே) சுரும்பு துரந்தமைத்த—வண்டுகளைத் துரந்து அமைக்கப்பட்ட; [1]திருந்துமலர் அமளி—திருத்தமாகிய புட்ப சயனத்திலே; [2]பருந்து பசி தணிக்கும் திருந்து இலை நெடுவேல்—பருந்து முதலாகிய பறவைகளினுடைய பசியைக் கெடுக்கும் திருந்திய இலைவடிவாகிய நெடிய வேலையுடைய; மைந்துடை மைந்தன்—[3]அதிபலம் பொருந்திய இராசகுமாரன்; [4]சிந்தை—முன் போகம் கொண்டதனாலே காமவிகாரம் தீர்ந்த மனதானது; கனற்றக் கன்றியது இன்றெனில்—[5]காமாக்கினியினாலே வெந்து கன்றியதில்லையாயின்; காமம் இன்று—அவனுக்குக் காமவிதனமில்லை; அதனால்—ஆதலால்; அவன் [6]அகாமன் அன்றே—அவன் அகாமனல்லவோ? அதுவன்றியும்.

---

1. காம்பும் புறவிதழும் பிற கோதுகளும் களைந்து ஆய்ந்த இதழ்களே பரப்பிய அமளியாதலின், சுரும்பு துரந்தமைந்த அமளியென்றொழியாது "திருந்து மலரமளி" யென்றார். "சுரும்புணக் கிடந்த நறும்பூஞ் சேக்கை" (சிலப். 2 : 28) யாயினும், ஆண்டு எழும் நறும்புகையால் சுரும்புகள் துரத்தப்படுமென வறிக.

2. பகைவரைக்கொன்று அவருடலைப் பருந்தும் கழுகும் உண்டு பசி தீர்வித்தல்பற்றி, வேலை பருந்து பசிதணிக்கும் வேல் என்றார்; "பருந்துபசி தீர்க்கும் நற்போர்த், திருந்துவேல் நாகற் கூறினர் பலரே" (புறம். 179) என்றும், "பருந்தாரிக்கும் முத்தலைவேல்" (சிதம். செய். 82) என்றும் சான்றோர் கூறுப.

3. சத்துருக்களின் வலியைக் கொடுக்கிற அதிபலம்—உ. வே.

4. மைந்துடை மைந்த னென்றும், கனற்றக் கன்றிய தின்றெனில் என்றும் முறையே முன்னும் பின்னும் விசேடித்தமையின், சிந்தை யென்பதற்கு, "முன்போகங்கொண்டதனாலே காமவிகாரம் தீர்ந்த மனம்" என்று உரை கூறினர்.

5. காமாக்கினியாலே கனலக் கன்றுத லில்லையாயின்—உ. வே.

6. ந+பிராமணன், அப்பிராமணன் என்று வருதல்போல, ந+காமன் என்பது அகாமன் எனவந்தது.

10—21. (நாமவேலோன்............உளத்தேத) நாமவேலோன்—அச்சத்தைச் செய்யும் வேலையுடைய புருடன்; [1]முட்புற முதிர்கனிப் பொற்களை—[2]முள்ளைப்புறத்தேயுடைத்தாய் முதிரப் பழுத்த பொன்னிற முடைத்தாகிய பலாச்சுளையும்; மைக்கோள் கதலித் தீங்கனி—[3]கருவாழையின் இனிய [4]பழமும்; [5]இதலூன் பொரியல்—கவுதாரி மாங்கிசப் பொரியலும்; வாளைப் பீலி—வாளைமீனின் [6]உட்பீலியும்; மீளிக் கயல் துணி-இளங்கயல் மீன் துண்டமும்; கறிச்சேறு கமழும் மறிக்கோழ் ஊன் துவை-மிளகின் குழம்பு மணங்கமழும் [7]செம்மறிப் புருவையின் கொழுத்த மாங்கிசத்தின் [8]ஆணமும் ஆகிய இவை

---

1. "பலவின் முட்பொதி குடக்கனியொடு" (மீனுட்சி. பி. 6 : 2) என்றும், பொன்னிறம் பழுத்த பூஞ்சுளை வருக்கை" (திருவாரூர் நான் 5 ; 6) என்றும் சான்றோர் கூறுதல் காண்க.

2. முட்புற முதிர்ந்து பழுத்த பொன்னின் நிறம் போன்ற பலாச் சுளையும்—உ. வே.

3. மலைவாழை வகைகளில் ஒன்று; தாறொன்றுக்கு இருநூறுமுதல் நானூறு பழம் வரை இருக்குமென்றும், இது மிகவும் உயர்ந்த வகையென்றும், கொங்குநாட்டுக் கொல்லிமலை, பச்சைமலை முதலிய மலைகளில் நன்கு விளைவதென்றும் சேலம் ஜில்லா கெஜட்டிர் கூறுகிறது.

4. இதனைக் கம்பர், "காரும் வார்சுவைக் கதலியின் கனி" (வாலிவ. 57) எனச் சிறப்பித்துள்ளார்.

5. இதற்பறவையின் ஊனுணவு "வீரிய விருத்தி" பண்ணும் என்று சித்தநூலார் கூறுப.

6. உட்பீலி—உள்ளீடாகிய தசை. வாளை மீனின் உள்ளீடாகிய தசை பீலிபோறலின், பீலியெனப்பட்டது.

7. செம்மறிப் புருவை—செம்மறியாடு; "குரூஉமயிர்ப் புருவை யாசையினல்கும்" (ஐங். 238).

8. செம்மறிப்புருவையின் கொழுத்த மாங்கிசத்திலே மிளகுடைத்தாகிய ஆணமும்—உ. வே. "சர்க்கரைக்கட்டிக்கு ஆணமேதுக்கு" என்பது பழமொழி. ஆணம், சுவையுள்ள குழம்பு.

அழகிய சிறகைப் பரப்பி; ஊதுவண்டு—ஊதுகின்ற [1]வேட்டுவனாகிய குளவியையே; உணர்ந்த பேதை வான்புழு—குறித்துக்கொண்டு கிடந்த அறிவில்லாத வலிய புழு; [2]கவர்பு உக மாதர் வண்டு ஆவதை யறிதி—வேறுபாடற [3]அழகிய அவ்வேட்டுவனாவதும் அறிவாயாக;

---

1. வேட்டுவாளிப் பூச்சியையே—உ.வே. வேட்டுவன் என்னும் குளவி ஒரு புழுவைக் கொணர்ந்து ஒரு கூட்டில் அடைத்து, அதனை எப்போதும் கொட்டிக் கொண்டேயிருக்குமென்றும், அதனால் அப் புழு அதனையே நினைந்திருந்து முடிவில் அக்குளவியாகவே மாறிவிடும் என்றும் கூறும் இதனை வட நூலார் பிரமரகீட நியாயம் என்பர். மெய்கண்டதேவரும், இக்கருத்தை "வேட்டுவன மப்புழுப்போல் வேண்டுருவைத் தான்கொடுத்துக் கூட்டானே மண்போற் குளிர்ந்து" (சிவ. போ. சூ. 1. 2 : 4) என்றும் அருணந்தி சிவனார், 'மற்றோர் செந்துப் பண்டைய வுருவந்தானே வேட்டுவனாய்ப் பிறக்கும்" (சிவ. சித். 2 : 43) என்றும் கூறுவர். தம் கொள்கையைச் சாதித்தற்குச் சில சமயவாதிகளும் இதனையே எடுத்துக் காட்டாகக் கொண்டு, "முன்னோன் றனது முதிரொளி ஞானம், அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்து, வண்டென வுயிரைக் கொண்டிடும் உயிரது, தன்னை நோக்கித் தானது வாகி ஐவகைத்தொழிலும் மெய்வகை யுணர்வும், பிரியாவாறு பெற்றுத், திரியாப் பெரியோர் திரட்சி சேர்ந்திடுமே" என்பர். (சங்கற்ப. சிவ சம. சங்கற் 19-25).

2. புழுவினின்றுந் தோன்றிய வேட்டுவற்கும் குளவியாகிய வேட்டுவற்கும் வேறுபாடு இல்லையாதலின், கவர்புக என்றார்; கவர்பு—ஐயுறல்; "சுட்டல் திரிதல் கவர்கோடல்" (மணி 27:22) என்று பிறரும் கூறுதல் காண்க.

3 ஞானவான்கள் சிவமாந்தன்மை எய்தும் திறத்தை விளக்கற்கு, உப்பளத்துப்பட்ட வை உப்பாதலும், கடல்சேர்ந்த நன்னீர் உவர் நீராதலும், புழு வேட்டுவனாதலுமாகிய மூன்று உவமைகளைக் கூறினர்; இதனால் தன் முதல் கெடாமையும் முற்றறிவுப் பேறும் ஞான வடிவுடையராதலும் மூன்றும் முறையே விளங்குதல் காண்க. உப்பளத்துப்பட்ட சிறு மணலும் துரும்பும் தம் இயல்பு கெடாது வெண்டிரளுப்பாதல் போல, உயிர் சிவமாந்தன்மை எய்திய வழியும் தான் சத்தாய் நிற்பதும், நன்னீர் தன் தன்மை இழந்து கடலின் தன்மை பெறுதல்போல, உயிர் அறிவின் சிறுமை நீங்கிச் சிவத்தின் பேரறிவுபெறுதலும், புழு தன் வடிவு நீங்கி வேட்டுவனும் உருப்பெறுதல் சிவானந்தம் துய்க்கும் ஞானவடிவு பெறுதலும் இவ்வுவமைகளால் உணரப்படும். இவ்வாறு கொள்ளாவழிச் சிவ சம வாதமாய் முடியும் என அறிக. முத்தி நிலைக்குச் சிவ சம வாதிகள் வேட்டுவனும் புழுவை உவமை கூறுவர். "நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்ட அரசு அமர்ந்திருந்தார்" (பெரிய. திருநாவுக் 427) என்றவிடத்து இருந்தார் என்பதனால் தன் முதலுண்மையும், சிவானந்த ஞானப்பேற்றால் பேரறிவுடைமையும், ஞானவடிவேயாகி என்றதனால் சிவாகார வடிவும் சான்றோர் குறிக்குமாறு காண்க. காதலிக்கப்பட்ட—உ. வே.

16—18. (கோதற்ற...........மற்றே) கோதற்ற அமலனை ஆசற உணர்ந்த அமலர் செய்தியும்—குற்றமில்லாத விமலனாகிய பரமசிவனை ஐயமற உணர்ந்த நின்மலராகிய ஞானவான்களின் இயல்பும் ; அற்று —[1] அச்சிவத்தன்மையாவதாமல்லது வேறுபாடில்லை, கண்டாய் எ. று.

ஆல். மற்று. அசை நிலை.

---

## அணையுந் தன்மை.

### அகவல் 74.

பசுபதி யாகப் பன்னிய பனுவன்
மதியோர் பெரும வாயன் றது[2]வெனின்
ஒன்றொன் றாயி னல்லதை யிரண்டொன்
றென்று மாகா தெவணெனி னாவது
கெட்டது வாத லதுவாய்க் கெடலல
தொட்டுவ திவனோ வின்றே கெட்ட
தாத றானே யமரர்க் காயினும்
மேவா தாகு மதுவாய்க் கெடுமெனின்
ஆகிய பின்னர்க் கெடுவ தியாதென்
றேவிய கடாவுக் [3]கிடையீ டாவ
தழிந்தாய்த் தன்றா யழிந்தது மன்றே
மொழிந்தவை யிரண்டு மோரமை யத்தே
எழுந்த தியாவகை யென்னிற் செழுந்திரட்
காரிரு ளிரிய நூறிக் கனல்வாள்

---

1. அச்சிவமாந்தன்மை பெறுமதல்லது வேறில்லை, காண் —உ. வே. அத்தன்மைத்தாமல்லது—உ. வே.
2. வெனை—பா. வே.
3. கிறையின்றாயின்—பா. வே.

ஏரொளி விளக்க மெய்திற் றன்று அங்
கெய்திய பின்ன ரிருளற விரித்த
செய்தி செப்பி னில்லை மையறத்
தெளிமதி யிவணுஞ் சிவணிய [1]தளிகிளர்
தடவு நிலைப் புன்னை மடலவிழ் வாசம்
புலவுக்கட லகற்றுங் கான லலவன்
வன்பெடை தழீஇ யின்புறு காயல்
உப்புவிளை பழனத் துற்ற [2]பொற்கோட்
டுலவையி னறிக மாதோ
கலைவ லாளர் நிலைபுணர் பண்பே.

இது, "தேவதேவனைச் சேர்ந்தவர் அவனே, ஆவகை யல்லது உளதோ[3]" என்று அருளினாய் ; ஆனமை எவ்வண்ணம் என்று வினவப் பசுத்துவம் போகையும் பதித்துவமாகையும் ஒரு காலத்திலே யாம் என்று கூறியது.

1–4 உரை: (பசுபதி....ஆகாது) மதியோர் பெரும--ஞானவான் களுக்குத் தலைவனாய் உள்ளோனே ; பசுபதியாகப் [4]பன்னிய பனுவல் —பசுத்துவமான ஆன்மாப் பதியாம் என்று சாதித்த சாத்திரம் ; வாயன்று–[5]பொருந்துவதில்லையாயிருந்தது; அது என் எனின்-அஃது என்னென்னில் ; ஒன்றி ஒன்றாயின் அல்லது இரண்டு ஒன்று என்றும்

---

1. தணிகிளர், தனி வளர்—பா. வே.
2. பொற்றேட்—பா. வே.
3. ஞானா. 73. 7–8.
4. மேலே கூறிய எடுத்துக்காட்டுக்களால் சாதித்துக் காட்டும் அளவை நெறியால் முத்தியில் ஆன்மாச் சிவமாந்தன்மையெய்தும் என்று சாதித்த துணிபொருளை ஈண்டுப் பன்னியபனுவல் என்றான்.
5. சாத்தியம் குற்றமுடைத்தாயிருந்தது—உ. வே.

ஆகாது—[1]முன்பே பதித்துவ முண்டாயின் பதியாமல்லது [2]அசுத்தமான ஆன்மாச் சுத்தனும் என்பது எக்காலத்தும் பொருந்தாது;

4—6. (எவண்........இன்றே) எவண் எனின்—எவ்வண்ணம் எனின்; ஆவது கெட்டு அதுவாதல்—[3]ஆகும் முறைமையாவது பசுத்துவங் கெட்டுப் பதியாகுதல்; அது ஆய்க் கெடல் அலது—பதியாகிப் பின்பு பசுத்துவம் கெடலன்றி; இவண் ஒட்டுவது இன்று—இவ்விடத்துத் [4]தேவரீர் உரைத்தருளுமது பொருந்துவதாய் இல்லை;

---

1. ஓர் ஆன்மா முன்பே பதித்துவமுடைத்தாயினல்லது அசுத்தமான அவ்வான்மா சுத்தமான பதியாமென்னும் அது எக்காலத்தும் பொருந்தாது—உ. வே.

2. ஒன்றாயிருப்பதொரு பொருள் தன்னிற் பிரிந்து மறுபடியும் கூடின் ஒன்றுமல்லது, ஒன்றிரண்டு வேறாய் இரண்டாயிருப்பவை தம்மிற்கூடினும் ஒன்றுதல் இல்லை என்பது, ஆன்மாவும் சிவமும் ஒன்றாயிருந்து பின்பு ஆன்மாவும் சிவமுமெனப் பிரிந்து நின்று, மறுபடியும் அப்பிரிவு நீங்கிக் கூடின் ஒன்றுதல் அமையும்; சிவனும் சீவனும் என இரண்டாய் அனாதியாய் இருப்பனவாதலின், இவை ஒன்றுதல் கூடாதே யென்பது தோன்ற நின்றது. சீவனும் சிவனும் வேறுபட்ட இரண்டு என்றற்கு, அசுத்தமான ஆன்மா என்றும், சுத்தனாகிய சிவன் என்றும் உரை கூறுவதாயிற்று. இது மாயாவாதத்தை உட்கொண்டு கூறியது. "ஒன்றிரண்டாகி யொன்றின் ஒருமையாம் இருமையாகி, ஒன்றிலொன்றழியும் ஒன்றாதென்னின் ஒன்றாகா தீயும், ஒன்றிரும்புறழினன்றும் உயிரினைத் தொழிலும் வேண்டும், ஒன்றி நின்றுணரு முண்மைக் குவமையாணவத்தோடொன்றே" (87) என்று சிவப்பிரகாசம் கூறுவது ஈண்டு நோக்கத்தக்கது.

3. இஃது அச்சுப்பிரதியில் இல்லை.

4. சீவன் சிவனாகிய இரண்டும் ஒன்றும் முறைமையை விளக்கு முகத்தால் தன் கருத்தைத் தெரிவிக்க முயலுகின்றானாகலின், அதற்கேற்ப ஒன்றும் முறை இருவகைப்படும்; ஒன்று, பசுத்துவம் கெட்டுப் பதியாதல்; மற்றொன்று, பதியாகிப் பசுத்துவம் கெடுதல் என வகுத்துக்கொண்டு ஒவ்வொன்றையும் மேலே விளம்புகின்றான்.

6—10. (கெட்டது..................ஆவது) கெட்டது ஆதல்—யாதொரு பொருளும் கெட்டால் பின்னை ஆதல்; [1]அமரர்க்காயினும் மேவாதாகும்—தேவர்களே முயன்றாலும் முடியாது; அது [2]ஆய்க் கெடும் எனின்—பதியாகிப் பின்பு பசுத்துவம் கெடும் எனில்; ஆகிய பின்னர்க் கெடுவது யாவது—பதியான பின்பு கெடும் அது யாதாம்; என்று ஏவிய கடாவுக்கு—என்று கடாவிய கடாவுக்கு; இடையீடாவது—பரிகாரமாவது கூறக் கேட்பாயாக;

11—13. (அழிந்தது..........என்னின்) அழிந்து ஆய்த்து அன்று—பசுத்துவம் [3]கெட்டுப் பின்பு பதித்துவமானதும் அல்ல; ஆய் அழிந்ததும் அன்று—[4]பதித்துவமாகிப் பின்பு பசுத்துவம் கெட்டதுமல்ல; [5]மொழிந்தவை இரண்டும் ஓரமையத்தே—சொல்லப் பட்ட இரண்டும் [6]ஒரு காலத்திலே, காண்; எழுந்தது யாவகை என்னின்—அங்ஙனமாயின் அஃது எவ்வகை போல என்னில்;

---

1. சால்பும் வியப்பும் இயல்புங் குன்றின், "மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல், ஆசறு காட்சி யையர்க்கு மந்நிலை, எளிய என்னார் தொன்மருங் கறிநர்" (குறிஞ்சி. 15-18) என்று சான்றோரும் கெட்டது ஆதல் கூடாமையை விளக்குமாறு காண்க. "கெட்டது அணைவின்றாம்" என்பது சிவஞானசித்தி.

2. "சிவத்தை யணைந்தொன்றாய் நின்றதுயிர் கெட்டென்னில் கெட்ட தணைவின்றாம், நின்றதேற் நீகடில்லை அணைந்து கெட்டதென்னில், பொன்றினதேல் முத்தியினைப் பெற்றவரார் புகல் நீ, பொன்றுகையே முத்தியெனில் புருடன் நித்தனன்றாம், ஒன்றியிடும் நீரொடு நீர் சேர்ந்தாற் போல் என்னில் ஒரு பொருளாம் அதிபதியோ டுயிர் பொருள் ஒன்றன்றே" (சிவ. சித்தி 11-9) என்பர்.

3. கெட்டபின்பு—உ. வே.

4. பதித்துவமான பின்பு—உ. வே.

5. பசுத்துவம் நீங்கலும் பதித்துவம் எய்தலும் ஒரு காலத்து உடனிகழ்ச்சி யென்பார், மொழிந்தவை யிரண்டும் ஓரமைத்தே என்றார்.

6. "ஒரு முகூர்த்தத்திலே காண்" என்பது செப்பறை யேட்டு உரை வேறுபாடு.

13—17. (செழுந்திரள் ..........இல்லை) செழுந்திரள் காரிருள் இரிய நூறி—அழகிய செறிந்த [1]கரிய இருளைப் போகத் துறந்து எரிமொளி வாள்கனல் விளக்கம் எய்திற்றன்று—மிக்பு அழகிய மிக்க வொளியையுடைய [2]விளக்குப் பிரகாசித்ததன்று; ஆங்கு—அவ் விடத்து; எய்திய பின்னர் இருள் அற இரித்த செய்தி செப்பின் இல்லை—விளக்குப் புகுந்த பின்பு இருளை அறவே போக்கின செய்தி யும் விசாரிக்கின் இல்லை, கண்டாய்;[3]

17—18. (மையற... .......சிவணியது) இவணம் சிவணியது— இவ்வண்ணம் பதித்துவம் பெறுதலும் பசுத்துவம் போதலும் என்று; மையறத் தெளிமதி—குற்றமறத் தெளிய உணர்வாயாக;

18—24. (அளி கிளர்.........பண்பே) [4]தடவுநிலை அளிகிளர் புன்னை—பெரிய நிலையினையுடைத்தாகிய வண்டு கிளரப்படாநின்ற புன்னைப் பூவின்; மடல் அவிழ் வாசம் கடல் புலவு [5]அகற்றும் கானல்—இதழ் விரிகிற நறு நாற்றம் சமுத்திரத்திலுண்டாகிய புலால் நாற்றத்தைக் கெடுக்கும் கானற் சோலையில்; அலவன் வன்பெடை தழீஇ இன்புறு காயல்—நண்டு கற்பு வலியையுடைய தன் பெடை

---

1. பெரிய இருளை—உ. வே.
2. அக்கினி விளக்கு—உ. வே.
3. இக்கருத்தைச் சிவஞான முனிவர் "இருணீக்கமும் ஒளி விளக்கமும் உடனிகழ்ச்சியாமாறு போலப் பசுத்துவ நீக்கமும் சிவத்துவ விளக்கமும் இடையீடின்றி உடனிகழ்வனவாம்" என்பதை மேற் கொண்டு, சிவத்துவ விளக்கமாவது இன்னதென்பது எய்த அருள் விளக்கம் என்றும் கூறுதல் காண்க. (சிவ. பாடி. சூ. 11); இவ்வுவமையின் சிறப்பை, 'விளக்குப் புகவிருண் மாய்ந்தாங்கொரு வன், தவத்தின்முன் னில்லாவாம் பாவம்" (நாலடி. 51) என்று பிறரும் கூறுதல் காண்க.
4. ஈண்டுக் கூறப்படும் உவமையால் அருள் விளக்கத்தால் ஆன்மாச் சிவத்துவம் பெறும் திறம் விளக்கப்படுகின்றது.
5. கானலில் நின்ற புன்னை தன் மணத்தால் கடற்புலவு அகற்றும் என்பதைச் சான்றோர் "புலவுற் றிரங்கி யதுநீங்கப் பொழிற்றண் டலையிற் புகுந்துதிர்ந்த, கலவைச் செம்மல் மணங்கமழத் திரை யுலாவு கடற்சேர்ப்ப" (சிலப். கானல். 39) என்பதும், "கடலினது புலால் நாற்றமாகிய தீங்கினைப் பூக்களின் மணம் போக்கின" (கலி. நெய் 10 நச். உரை) என்பதும் காண்க.

யோடே கூடி மருவிப் போகம் புசிக்கும்[1] - நிரயில்; உப்பு விளை பழனத்து உற்ற—உப்பை விளைக்கும் அளத்திற்பட்ட; [2]பொற்கோட்டு உலவையின்-அழகிய மரக்கொம்பு வடிவு வேறுபடாதே உப்பாயினாற்போல; கலை வலாளர் நிலைபுணர் பண்பு—ஞானவான்கள் பதித்துவம் பெறும் முறைமை; அறிக—நின்ற நிலையிலே சுத்தராம், இத்தனையே, என்று அறிவாயாக. எ. று.

ஓ, ஏ, மதி, மாது, அசை. ஒளிவாள், மீமிசை போலக் கொள்க.

---

## அணைந்தோர் தன்மை.

அகவல் 75.

ஆருக் கூறிய வத்து வாதுமற்
றீரூ டியையா விறைவற் கியையா
சேதனற் செறியா வியாபகத் துறழ்தலின்
என்னிற் புற்கலற் கெய்தும் பன்னிய
பாசம் பசுவுக் காசில் வான்பிணி
அந்தப் பந்தஞ் சம்பிர தாயத்
[3]துந்தி யேபெறு முறைமையி னுந்திய
காசினி யாதி யாசி றத்துவம்
போக பூமி யாக மமர்ந்தோர்க்

---

1. கழிவெளியில்—உ. வே.
2. பாச நீக்கமும் அருள் விளக்கமும் உடனிகழப்பெற்ற முத்தர்களை ஈண்டு **ஞானவான்கள்** என்றும், அவர் வடிவு வேறுபடாதே சிவஞானச் செலவராய்ச் சிவமாந்தன்மை எய்தும திறத்தை **அளந்திற்பட்ட பொற்கோட்டு உலவையின்** வைத்தும் கூறுகின்றார். இனி, **அருணந்திசிவனர்**, "இரும்பைக் காந்தம் வலித்தாற்போல இயைந்து அங்கு உயிரை, எரியிரும்பைச் செய்வதுபோல் இவனைத் தானாக்கி, அரும்பித்தந்தனத்தை யனல் அழிப்பதுபோல் மலத்தை, அறுத்த மலன் அப்பணைந்த உப்பேபோல் அணைந்து, விரும்பிப் பொன்னினைக் குளிகை யொளிப்பது போல் அடக்கி மேளித்துத் தானெல்லாம் வேதிப்பானுகிக், கருமபைத் தேனைப் பாலைக் கனியமுதைக் கண்டைக் கட்டியை யொத்திருப்பது அந்த முத்தியினிற் கலந்தே" (சிவ. சித். **11-12**) என்று கூறுவது காண்க.
3. **துந்தியேறு முறைமை பா. வே.**

கற்ரு கலின்மற் றதுமுத லாகப்
[1]பற்றும் பற்றறுக் ததனூங் குற்ற
வும்ப ரும்பரி னுய்த்து வாப்பற
சிவனிடத் திலயஞ் [2]செய்க செய்கல்
அவமில் போக்காங் கதுமற் றெவணெனிற்
சுற்பம் பூரி சந்திரம் பொருவல்
எற்றற் றிறையுற லிவனு மற்றுந்
தருமா தருமந் தாழும் வரிமடி
வருண முதலிய பொருணனி புரக்கும்
உயர்ந்தோ னென்றல் வியந்தினி தெங்கணும்
நின்ற விறைக்கு நினைமோ விறகின்
எங்கணு மாயினு மிகன்மே லல்லதை
அங்கெரி காணு வாறும் பொங்கிய
குணத்தின் மிக்கோன் குழவி னுயர்ந்தோன்
எனத்தகு முரையினு மியையு மனைத்தால்
ஆய காலை யத்து வாவா
மேய மாநெறி யியையமற் றிஃதே.

இஃது "அழிந்தாய்த்தன்று ஆயழிந்ததும் அன்று, மொழிந்தவை இரண்டும் ஓரமையத்தே[3]" என்று அருளினுய்; அஃது எவ்வண்ணம் எனத் தருமா தருமம் போலப் பசுத்துவம் போகையும் பதித்துவம் ஆகையும் உடைத்தாதலால், அத்துவாவால் பிரயோசனம் ஆன்மாவுக்கே எனக் கூறியது.

1—4. உரை: (ஆரு..........என்னின்) [4]ஈரேறு இயையா இறைவற்கு—[5]அணுகியாய் ஒருபடித்தா யுள்ள பரமசிவனுக்கு

1. பற்று மற்றறுத் ததினூஉங் குற்ற —பா வே.
2. செய்கை செய்தல்—பா வே 3. ஞான 74:11–12.
4. "இறப்பிலார் பிணியில்லார் தமக்கென்றுஞ் சேடில்லார் பிறப்பிலாப் பெருமானூர்" (ஞானசம். 322·7) என்றும், "வான்கெட்டு மாருத மாய்ந்தழனீர் மண் கெடினும், தான் கெட்ட லின்றிச் சலிப பறியாத் தன்மையன்" (திருவா. தெள்ளே. 17) என்றும சான்ருேர் கூறுதலின், ஈருேடு இயையா இறைவற்கு என்ருர்.
5. அணுகியா யென்னும் இது சில ஏடுகளில் இல்லை.

[1] ஆறாக் கூறிய [2] அத்துவா இயையா — சடத்துவாவாகச் சொல்லப்பட்டவற்றால் உபகாரம் இல்லாமையாலே அவற்குப் பொருந்தா ; சேதனன் வியாபகக்கா உறழ்தலின் செறியா என்னின்— ஆன்மாவும் வியாபக முடைமையால் அவனுக்கும் உபகாரம் இல்லையாதலால் அவனையும் அடையா என்று சொல்லின் ;

4—7. (புற்கலற்கு......முறைமையின்) பன்னிய பாசம் பசுவுக்கு ஆசில் [3] வான்பிணி — சொல்லப்பட்ட பாசமானது ஆன்மாக்களுக்குப் [4] பற்றுக்கோடு ஆகாத பெரிய பந்த மாதலால்; அந்தப்

---

1. அத்துவா ஆறாவன : வன்னம், பதம், மந்திரம், கலை, தத்துவம், புவனம் என்பனவாம். "இவை ஒரோ வொன்றாகக் கழித்துக் கொண்டு சிவபதத்திற் சேறற்கு வழி போதலின், அத்துவா எனப்பட்டன" வென்றும், "அத்துவா வெனினும் வழியெனினும் ஒக்கும்" என்றும் சிவஞான முனிவர் கூறுவர் (சிவ. பாடி. **2-3**) பசுத்துவம் எய்திய ஆன்மா, அது நீங்கிச் சிவபதம் எய்துதற்கு இவை வழியாதலின், எஞ்ஞான்றும் ஒரு தன்மைத்தாய் நிற்கும் செம்பொருளாகிய முதல்வற்கு இவை வேண்டாமையின், இறைவற்கு **ஆறுக் கூறிய அத்துவா இயையா** என்றார். ஆறுக்கூறிய அத்துவா என்னும் இஃது, இரட்டுற மொழிதலால், ஆன்மாப் பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் எய்துதற்கு வழியாகக் கூறிய அத்துவா என்று பொருள் தந்து நிற்குமாறுங் காண்க.

2. யாதொரு காரணத்தால் ஆன்மாக்களால் கலை முதலியவற்றுள் ஒன்றை விட்டு மற்றொன்றை அடைந்து, அவ்வாறு எல்லாம் நீங்கிய பின்னர்ப் பிறப்பிறப்பு இல்லாத தான மானது அடையப் படுகின்றதோ அந்தக் காரணத்தால் கலை முதலியன **அத்துவாக்கள்** எனக் கூறப்படுகின்றன" (இரத். சூ. **88**)

3. தன்னால் பெருந்துன்பம் விளையினும் உயிர் தன்னையே காதலித்து உறையுமாறு செய்து, வித்தும் விளைவுமாய்த் தோன்றி அதனைப் பிணித்து நிற்பது பற்றி உடல் முதலிய பந்தத்தை, **வான்பிணி** என்றார் ; "துன்பம் உழத்தொறும் காதற்று உயிர்" (**குறள் 940**) என்று சான்றோர் கூறுதல் காண்க.

4. உயிர்கட்குப் பற்றுக் கோடாவது திருவருள் ஞானமன்றிப் பிறிதி யாதும் இன்மையின், மலமாசு கழீஇக் கோடற்கு வரும் உடல் கருவி உலகு முதலிய பந்தங்கள், **பற்றுக் கோடாகாத பந்தம்** எனப் பட்டன. ஆசு-பற்றுக்கோடு ; "ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ" (**புறம். 235**) என்று சான்றோர் வழங்குதல் காண்க.

பந்தம் [1]சம்பிரதாயத்து உங்கிப்பெறும் முறைமையின்—அப்பந்தத்தைத் தீக்கையாற் சேதித்து [2]முத்தியைப்பெறும் முறைமையால்; புற்கலற்கு எய்தும் — மலபரிபாகத்தால் [3]திரோதகம் நீங்கிச் சிவஞான முண்டாகைக்குப் பக்குவரான அன்மாக்கட்குக் [4]கூடும்; கூடும் முறைமைதான் எங்ஙனம் என்னில்.—

7—14. (மூங்கிய ......போக்கு) மூங்கிய [5]காசினியாதி ஆசில் தத்துவம்—முன்னெண்ணப்பட்ட பிருதிவிதத்துவ முதலாகவுள்ள

---

1. சம்பிரதாயம்—தீக்கை ; "வம்பறு சம்பிர தாயத் தஞ்சுடர்" (ஞான 8 ; 36) என்று முன்னரும் கூறினர்.

2. பெறப்படுவது முத்தியாதலின், செயப்படுபொருள் அவாய்நிலையாற் கொள்ளப்பட்டது.

3. திரோதகம்—மறைப்பு ; "அது தான் ஞானதிரோதகமாய் மறைத்துக்கொடு நிற்றலான்" (சிவ. போ. 4 2) என்றாற் போல. திரோபவம்—உ. வே.

4. கூடுந்திறத்தை அகோரசிவாசாரியார், "எவ்வாறு உலகிலுள்ள வழிகளுள் முறையே மனிதனைவன் ஒரு காலடியால் வரையப்பட்ட இடத்தை விட்டு மறு காலடியால் வரையப்பட்ட இடத்தை அடைந்து, இவ்வாறே மேலுஞ் சென்று கிராமத்தையடைகின்றானோ, அவ்வாறே அசுத்த விடயங்களான கலை தத்துவம் புவனம் வன்னம் பதம் மந்திரம் என்னும் இவற்றில் கன்மத்தின் பயனை அனுபவித்தற்காகவும், சுத்தவிடயங்களான கலை முதலியவற்றில் சருவஞ்ஞத்தன்மை முதலியவற்றை அடைதற்காகவும் தீக்கையில் இவற்றிற்கு விசேடமான சேர்க்கை செய்யப்படுகின்றது" (இரத். 88. உரை) என்று உரைக்கின்றார்.

5. காசினியாதி தத்துவம் வினைப்பயனை நுகர்ந்து கழித்தற்கு உபகாரமாதலின், காசினியாதி ஆசில் தத்துவம் எனச் சிறப்பித்தார். முன்பு இக்காசினியாதி தத்துவப் படைப்பு ஆன்மாவின் பொருட்டே என்றது (ஞான 12 6·8) கடைப்பிடிக்க. மிருகேந்திரமும்,

கார்யம் க்ஷித்யாதிகம் தேஷாம் கர்த்ருʼத்வேந ப்ரயுஜ்யதே ।
ஸ்வாயத்தவ்ருʼத்திஸம்பாவாந்நதத்க்ருʼதம் கர்த்ருʼபூர்வகம் ।
வாஸிஷேஷ்யாஸ் பராஷயுக்தஸ் க்ஷேத்ரஜ்ஞஸ்ய பரஸ்ய யோஃ

(6 : 2-3) என்று கூறுவது காண்க,

குற்றமற்ற தத்துவங்கள்; ஆகம் அமர்ந்தோர்க்குப் போகபூமி— தேகம் எடுத்தோர்க்குப் போகம் புசித்தற்கு இடமாம்; அற்றாகலின் — அங்ஙனம் ஆதலாலே; அது முதலாகப் பற்றும் பற்றறுக்கு — அந்தப் பிரகிருதித்தத்துவ முதலாக அதன்மேற்பட்ட தத்துவங்கடோறும் தேகம் எடுத்ததாகக் கிரியாசத்தியாலே பாவித்து ஒவ்வொரு தத்துவத்திலுமுண்டாகிய போகம் புசித்தற்கு அமைந்த கன்மங்களை அனுபவித்ததாகவும் பாவித்துச் சேதித்து; அதன் ஊங்குற்ற உம்பரின் [1]உய்த்து— அங்ஙனம் [2]மேன்மேல் தத்துவங்களினும் ஆன்மாவைச் செலுத்தி; வம்பறு சிவனிடத்து இலயம் செய்க—உவமை

---

1. தத்துவம் புவனம் வன்னம் பதம் மந்திர மென்ற ஐந்தும் கலையில் ஒடுங்க, அக்கலை, நிவிர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி சாந்தியதீதை என ஐவகைப்பட்டு நிற்கும்; நிற்குமிடத்து நிவர்த்தி கலையில் புவனம் நூற்றெட்டு, தத்துவம் புவி, வன்னம் ஒன்று, பதம் இருபத்தெட்டு, மந்திரம் இரண்டு: பிரதிட்டாகலையில் புவனம் ஐம்பத்தாறு, தத்துவம் நிலமொழிந்த பூதம் நான்கு முதலாக அவ்வியத்த மீறாக இருபத்து மூன்று, வன்னம் இருபத்து நான்கு, பதம் இருபத்தொன்று, மந்திரம் இரண்டு; வித்தியாகலையில் தத்துவம் புருடன் அராகம் முதலிய ஏழு, புவனம் இருபத்தேழு, வன்னம் ஏழு பதம் இருபது, மந்திரம் இரண்டு; சாந்தி கலையில் தத்துவம் சுத்த வித்தை ஈசுரம் சாதாக்கியமென்ற மூன்று, புவனம் பதினெட்டு வன்னம் மூன்று, பதம் பதினொன்று, மந்திரம் இரண்டு; சாந்தியதீத கலையில் தத்துவம் சத்தி சிவமென்ற இரண்டு, புவனம் பதினைந்து, வன்னம் பதினாறு, பதம் ஒன்று, மந்திரம் மூன்று. இவற்றின் விரிவைச் சிவஞானபாடிய (2 : 2 3) த்தும், இரத்தினத் திரயம், மிருகேந்திர அத்வப்பிரகரணத்தும், பௌட்கரபசு படலத்தும் கண்டு கொள்க. இவ்வாறு கூறிய கலை ஐந்தினும் ஆன்மா தேகமெடுத்து ஆங்காங்குள்ள புவனங்களில் போகம் புசித்ததாகப் பாவித்து முடிவில் சிவமாந்தன்மை எய்தும் நிலையினை அஃது எய்தியதாகப் பாவித்துச் செய்யும் கிரியைவகை தீக்கையாம் எனஅறிக. இதன் இயல்பைச் சிவஞானசித்தி, சிவப்பிரகாசம் முதலிய நூல்களிற் காண்க.

2. மேன்மேற் றத்துவத்தை யதிட்டியா நின்ற உவமனில்லாத சிவனை யொக்க—உ. வே.

இல்லாத பரமசிவனை போக்க [1]நின்மலனுக்குக ; செய்தல் அவமில் போக்கு—இப்படி ஆக்குதல் குற்றமற்ற பாசச்சேதமாம் ;

14—16. (ஆங்கது..................இவனும்) ஆங்கு அது எவண் எனின்—அவ்விடத்து அந்தத் தீக்கை எவ்வண்ணம் என்னில் ; சுற்பம பூரி சந்திரம் பொருவல் எற்று—செபபானது குளிகையாலே வேதிக்கப் பொன்னோடே கூடின இயல்பு எத்தன்மைத்து ; அற்று இவனும் [2]இறைபுறல்—அத்தன்மைத்தே இவனும் சிவத்துவமாத லாம்[3] ;

16—18. (மற்றும்........புரக்கும்) மற்றும்—வேறு திட்டாந்தம் சொல்லின் ; விரிமடி முதலிய பொருள்—அகன்ற புடவை முதலான பதார்த்தங்கள் ; வருணம நனிபுரக்கும்—வேற்று வன்னம் பற்றினல் தம் நிறம் மிகவும் கெட்டு அவ் வேற்று வன்னம் பெறும் [4]தன்மைதது மாம் ;

---

1. ஈண்டுப் பாவனையாற் சிவமாக்கும இயல்பை ஞானவதி என்ப "உய்யும் வகையுவாது மனோபாவ கதத்தான் மலங்கள ஓட்டுவது ஞானவதி" யென்று சிவார்ச்சனுபோதம் கூறுகிறது.

2. செமபிற களிமபு போல உயிாகளைபபறறி "மோகஞ் செய்து ஆசை அனுபவத்தில்" தோய்ந்திடச் செய்யும் மலம, அச்செம்பு குளிகையால் பொன்னுதலிடத்துக் களிமபு நீககுதல போல, உயிர் சிவமாகுதன்மை எய்துமிடத்து மறைபபுச் சத்தி நீங்கிக் கெடும் என்பும, செமபைப பொன்னுக்குவது போலவது உயிரைச் சிவ மாக்கும் தீகக்கையாவது என்றும கூறுவர் ; அதனுலன்றே, இவரும் சுற்பம பூரி சந்திரம் பொருயல் எற்று அற்று இவனும இறையுறல் என்றார். குளிகை செமபிற களிமபை நீககிப பொனனுககுதல் போல, இறைவன மலம அகற்றித தானுககித் தன் மலரடிக்கீழ் வைப்பன என்பது கருத்து.

3. இவ்வுவமத்தால், தீக்கையின் சிறப்பை வலியுறுத்தினவர், அடுத்து வரும எடுத்துக் காட்டால், சிவமாந்தன்மை யெய்திய ஆன்மா வுக்கு மேலும பிறவிக்கு ஏதுவாகிய மலகன்மஙகளின் தொடர்பு கிடையா தென்பது வற்புறுத்தப்படுகிறது.

4. வேற்று நிறம் பற்றிய புடவை அதன் மேலும் நிறம் பற்ருமை, "ஆகாதே யுண்டது நீலம் பிறிது" (பழமொழி 168) என்று பிறரும், "கலவரை நீல முண்டதும் வெள்ளை நிறமாமே" (ஞான சம் 98 : 5) என்று ஞானசம்பந்தரும் கூறுதல் காண்க.

19—24. (உயர்ந்தோன் ... ........இயையும்) வியந்து இனிது எங்கணும் நின்ற இறைக்கு—இந்தப் பதித்துவம் [1]பெற்ற முத்தனும் பரமசிவனும் [2]சருவ வியாபகமாயிருக்கினும் [3]அதிசயமாக எங்கணும் வியாபித்திருக்கின்ற பரமசிவனை மாத்திரம்; உயர்ந்தோன் என்றல்—மேலான [4]சிவதத்துவத்தை அதிட்டித்துக் கொண்டிருப்பன் என்று சொல்லுதலை; நினைமோ—இனிதாக அறிவாயாக; விறகின் எங்கணுமாயினும்—காட்டத்தின் முழுதும் அக்கினி வியாபித்திருக்குமாயினும்; [5]இதல்மேல் அல்லதை அங்கு எரிகாணுவாறும்—காட்டத்திற்கு மேல் அல்லது அவ்விடத்து அக்கினி பிரகாசியாதவாறு போலவும்; பொங்கிய குணத்தின் மிக்கோன்—மிகுந்த குணத்தான்

---

1. பெற்றவனும் சிவனும் அதிசயமான சருவ வியாபியாயிருக்கச் செய்தே—உ. வே.

2. "முத்தான்மாக்கள் உலகிற்குக் கருத்தாக்களாக ஆவதில்லை; சிவனொருவனே உலகிற்குக் கருத்தாவாவான்" (இரத். 258) என்று சான்றோர் கூறுதலால், சருவ வியாபகமா யிருப்பினும் என்று உரை கூறினர்.

3. அதிசயமாக என்பது முதல் மாத்திரம் என்பது வரையுள்ள தொடர் சில ஏடுகளில் இல்லை.

4. சிவதத்துவத்தை அதிட்டித்துக் கொண்டிருக்கும் சிவத்தின் தடத்த நிலை பதி யென்றும், சொரூப நிலை சிவம் என்றும் கொண்டு சருவ ஞானோத்தராகமம், சிவத்தின் இயல்பை
"ஶிவோ வஸ்து ஸ்வஸ்வரூபேண த்ருஷ்டாதீதோ நிரஞ்ஜன: ।
நிராமயோ நிராதாரோ வணாத்ரஷ்டைவ விவர்ஜித: ॥"
(1. 45) என்று கூறுதல் காண்க.

5. தீக்கடை கோலைக் கொண்டு கடையுமிடத்துக் கடையப்படும் இடத்தல்லது பிறவிடத்தில் தீப்பிறவாமையின், இதல்மே லல்லதை அங்கு எரிகாணுவாறும் என்றார். அதன் உண்மை வெளிப்பட்டு ஒளிருமாற்று லறியப்படுவது பற்றி, காணுவாறு என்றதற்குப் "பிரகாசியாதவாறுபோல" என உரை கூறப்பட்டது. "யானை தந்தமுளிமர விறகிற், கானவர் பொத்திய ஞெலிதீ" (புறம் 247) என்பதனால், விறகிடத்தே தீக்கடைந்து பெறப்படுமாறு காண்க,

மிக்கோனை; [1]குழுவின் உயர்ந்தோன் எனத் தரும் உரையினும் இயை யும்—இக்கூட்டத்தில் உயர்ந்தோன் என்று சொல்லுமாறு போலவும் பொருந்தும் என்று கொள்க; இங்ஙனம் வருகின்றது தீக்கை[2] என வும் அறிவாயாக.

---

1. ஒரு நல்லவையின்கண் சான்றோர் பலர் கூடியிருப்பவும், அவருள்ளும் மிக்குற்ற குணங்களுட் சிறந்தோன் ஒருவனே தலை வனுதல் போல, முத்தான்மாக்கள் கூடியுள்ள முத்தி நிலையில் இறைவன் தலைவனுதல் அணியப்படும் என்றற்கு, **குழுவின் உயர்ந் தோன் எனத்தரும் உரையினும் இயையும்** என்ருர். நல்லவைத் தலைவன்பால் நல்லோர் பலரிடத்தும் காணப்படாத தலைமைப் பண்பொன்று நின்று சிறந்து விளங்குவது போலச் சிவமாந்தன்மை எய்திய முத்தான்மாக்களின் வேருய் முதல்வன் முதன்மையுற் றுளன் என்பதாம். முத்தி நிலையில் சிவத்துக்கும் சிவமாந்தன்மை எய்திய ஆன்மாவுக்கும் உள்ள வேறுபாட்டை அருணந்தி சிவஞர், "உம்பர் பிரான் உற்பத்தியாதி களுக்குரியன் உயிர்தானும் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தே" (சிவ. சித். 11 : 10) என்று கூறுதல் காண்க.

2. இத்தீக்கை, "நிராதாரம் சாதாரமென்று இருவகைப்படும். அவற் றுள் **நிராதாரமாவது** விஞ்ஞானகலர் பிரளயாகலருக்குத் தீவிரம் தீவிரதரம் என்னும் இருவகைச் சத்திநிபாதத்தாற் பரமசிவன் ஆசான் மூர்த்தியை அதிட்டித்து நின்று செய்வதன்றித் தானே முன்னின்று செய்வது; **சாதார தீக்கையாவது** சகலருக்கு நில வுலகத்தில் ஆசான் மூர்த்தியை அதிட்டித்து நின்று நால்வகைச் சத்திநிபாதத்தாற் செய்வது. அது திருநோக்க முதற் பலவகைப் படும்; அவற்றுட் சிறந்தது **ஔத்திரி தீக்கை**. அது சபீசம் நிர்ப் பீசமென்று இருவகைப்பட்டுச் சாதிகாரை நிரதிகாரை என்று இரு வகைப்படும். அவற்றுள் **சபீசமாவது** சைவாசாரத்தின் வழுவா தொழுகும் ஆற்றலுடையோர்க்குச் சைவாசார கன்மத்தை நிறுத்தி மற்றவற்றைச் சுத்திசெய்வது. **நிர்ப்பீச தீக்கையாவது** சைவா சாரம் அனுட்டிக்கும் வலியில்லோர்க்குச் சைவாசார கன்மத்தை யும் ஓமத்தாற் சுத்திசெய்யுந் தீக்கை. சபீசதீக்கைப் பேறு டையார் சாதகரும் ஆசிரியருமாய் நித்தியத்தும் நைமித்தி கத்தும் காமியத்தும் அதிகாரிகளாவராதலின் அவ்வதிகாரத்தைப் பயக்கும் சபீசநிர்வாணமும் அதற்கு அங்கமாகச் செய்யப்படும்

24—26. (அனைத்தால்......இலைதே) அனைத்து ஆய காலை—அத்தன்மையான விடத்து; அத்துவா மேய மாநெறி—அத்துவா

---

சமய விசேடங்களும் சாதிகாரை எனப்படும். நிர்ப்பீச நிர்வாண முடையார்க்கும் ஏனைச் சமய விசேட தீக்கையுடையார்க்கும் நித்தியமாத்திரத்தினன்றி நைமித்திகத்தும் காமியத்தும் அதிகாரம் இன்மையின் நிர்ப்பீசநிருவாணமும் ஏனைச்சமய விசேடங்களும் நிரதிகாரை எனப்படும்.'' ''சமயதீக்கை யாவது மண்டபபூசை செய்து விதிமுறையே மாணக்கனை வழிபடுவித்துச் சம்பாத வோமத்தாற் சுத்திப்படுத்துவது.'' ''விசேட தீக்கை யாவது அவ்வாறு சமயதீக்கை செய்து குண்டத்தில் வாகீசுவரனையும் வாகீசுவரியையும் ஆவாகித்து மாணக்கன் ஆன்மாவை வாங்கி வாகீசுவரனால் வாகீசுவரி கருப்பநாடியிற் செலுத்திக் கருப்பாதான முதலிய கிரியைகளை மும்மூன்று ஆகுதியின் நிரப்பிக் கரு முதிர்ந்து பயந்ததாகப் பாவித்துக் குண்டத்தினின்றும் ஆன்மாவை மீளவாங்கி மாணக்கன் இதயத்தானத்திலே தாபித்து இவ்வாறு சிவபுத்திரனாகச் செய்வது.'' ''நிர்வாண தீக்கையாவது இவ்வாறு சமயம் விசேடம் இரண்டுஞ்செய்து ஆன்மாக்கள் மூன்று திறத்தாற் செய்யுங் கன்மங்கட்கு இடமாகிய அறுவகை அத்துவாக்களின் தன்மைகளும் அவை ஒன்றினொன்று அடங்கும் முறைமையும் அறிந்து மந்திரமுதல் ஐந்தினையும் கலையைந்தினும் பகுத்தடக்கி, நிவிர்த்தி முதலிய ஐந்தையும் ஒவ்வொன்றாகச் சோதித்து அவற்றி னின்றும் வாங்கிய மாணக்கன் ஆன்மாவைப் பிராசாத நெறி யானே பரமசிவத்தில் ஒடுக்கி, ஒடுங்கிய வழி, மாணிக்கத்தைச் சார்ந்த படிகவொளி போலத் தற்போதம் அடங்கிப் பரமசிவ னுடைய அறுவகைக் குணங்களும் தன்குணமாகத் தன்மாட்டு மிக்கு விளங்கிச் சிவானந்தம் மேலிடும்படி ஒவ்வொரு குணங்களை மும்மூன்று ஆகுதியால் தோற்றுவித்து முப்பொருள்களின் பொது வியல்பு உணர்த்துமுகத்தானே மலத்தை நீக்கி உண்மை ஞானம் விளங்கச் செய்வது'' — சிவ. பாடியம். சிறப்பு. நிவிர்த்தி முதலிய கலைகளில் வைத்து, அதன் கண்ணுள்ள புவனங் களிற் பிறந்து ஆண்டு நுகரக்கடவ போகங்களைப் புசித்ததாகப் பாவித்து, சாந்தியதீதை வரையிற் கொண்டு ஆன்மாவைத் தூய்மை செய்யும் நெறியை அத்துவா மேய மாநெறி என்று மறுபடியும் கூறினர், வற்புறுத்தற் பொருட்டு.

மார்க்கமாகப் பொருந்திய[1] மகத்தாயுள்ள நெறியிலே கூடி ; இவைகை இஃது—தீக்கிக்கும் முறைமை இது எ. று.

மற்று, ஆல்—அசை. இவை மூன்றும் [2]பாசமோசனம்.

வாகீச முனிவர் அருளிய
ஞானமிர்த மூலமும் பழையவுரையும்
முற்றும்.

---

## தனியன்

[3]பொன்னை நிலத்தைப் புரிகுழன் மாதரைப் பொய்ப்புணர்வென்
றென்னை நிரஞ்சன தேவன்றன் றுணிழ லெய்துவித்த
மன்னை வயற் கோடற்பாகை யுளானை மனத்து வைத்த
பின்னை வருவ துண்டோ விடரஞ்சலென் பேதை நெஞ்சே.

வாகீச முனிவர் திருவடி வாழ்க.
குருவே துணை.

---

1. அத்துவாவாகிப் பொருந்திய—உ. வே.
2. அணைந்தோர் தன்மை—உ. வே.
3. ஏனுதிவாடி ஏட்டிலும் செப்பறை ஏட்டிலும் இக்கட்டளைக் கலித்துறை காணப்படுகிறது.

# அருஞ்சொற்பொருள் அகர நிரல்

எண்கள்—பக்கம்

# பிழை திருத்தம்

| பக். | வரி. | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| xi | 23 | தொக்கப்பட்ட | தொடுக்கப்பட்ட |
| xiii | 6 | கொளளப்பட்டுளது | கொள்ளப்பட்டுள்ளது |
| xix | 23 | தோன்றிசமய | தோன்றிச்சமய |
| xxxvii | 37 | முத்தி. நிச். பக். | முத்தி. நிச். பக். 55–8 |
| xxxviii | 4 | அபபோது | அப்போது |
| ,, | 9 | தோடடத்தையும் | தோட்டத்தையும் |
| ,, | 13 | தலைவராகவும | தலைவராகவும் |
| ,, | 14 | நூற்றுணடின் | நூற்றுண்டின் |
| ,, | 15 | கொளவது | கொள்வது |
| ,, | 18 | சொலலக்கேள் | சொல்லக் கேள் |
| xxxx | 1 | xxxx | xL |
| xxxxi | 1 | xxxxi | xLi |
| xxxxii | 1 | xxxxii | xLii |
| xLiii | 19 | நயபபுற | நயப்புற |
| xxxxiv | 1 | xxxxiv | xLiv |
| xLv | 20 | பைப்பத் | பைப்பயத் |
| ,, | 31 | மேலுமாக சென்று | மேலுமாகச் சென்று |
| xLvi | 33 | சைவநூல்கள் | சைவர்கள் |
| Liv | 33 | சொல் எழுத்து | எழுத்து சொல் |
| 22 | 14 | மாலையையுடைத்தாக்கிய | மாலையையுடைத்தாகிய |
| 35 | 3 | சினத்தையுடைய இந்தச் சர்ப்பத்தின் | சினத்தையுடைய பிறவியாகிய இந்தச் சர்ப்பத்தின். |
| 46 | 5 | பெருஞ்சிவனது | பெருஞ்சிவனது சத்திநிபாதம் தழைப்ப |
| 65 | 16 | அணைப்பாயால் | அணைப்பாயல் |
| 66 | 5 | இயற்கை என்று | இயற்கையாக்கை என்று |
| 96 | 7 | மாயாவதி | மாயாவாதி |
| 102 | 12 | நூற்றிருபது நூறநாலு | நூற்றிருபத்து நாலு |
| 103 | 4 | யானே யின்னுனையினே | யானே யின்னெனுயினே |
| 104 | 7 | முரண்டா | முரண்டர |
| | 17 | சிவனுஞ் | சிவணுஞ் |
| 126 | 13 | ...... | இது கன்மமல சாதகம் [கூறியது |
| 137 | 5 | வருகை | வருவகை |
| 143 | 5 | நிலை நலியுடைய | நிலைநலிபுடைய |

| | | | |
|---|---|---|---|
| 148 | 16 | குடில் | குழல் |
| 154 | 8 | இதிப்போதல் | இதுபோல் |
| 171 | 3 | தகியா அவ்வளவு | அவ்வளவு |
| 184 | 5 | முற்பயனீன்டுத் | முற்பயனீண்டுத் |
| 198 | 10 | மாளிகை யென்றும் | மாடமென்றும் மாளிகை |
| 200 | 28 | கரஞு | கிரஞு [யென்றும் |
| 209 | 3 | பாசச்சேதவுபாயவுண்மை | பாசச்சேதவுபாய முண்மை |
| 220 | 12 | யீட்டியழலுதல் | யீட்டி யுழலுதல் |
| 235 | 8 | வேறெு | வேரூ |
| 242 | 9 | துக்கமாவது | துக்கமாவது ; |
| 244 | 20 | திரையாடப் | திரையாடைப் |
| 248 | 4 | நீனிளமிங்தே | நீரிளமிழ்தே |
| 252 | 27 | முறையாக | முகையாக |
| | 28 | குவிமுகிள | குவிமுகிழிள |
| 253 | 22 | விதேசநாட்டு | விதேகநாட்டு |
| 255 | 25 | பாரதம் கூறுகிறது | என்று பாரதம் கூறுகிறது |
| 256 | 8 | கன்ம சேதம | கன்மச்சேதம் |
| 271 | 10 | அறிவரலவாச் | அறிவற லவாச் |
| 275 | 31 | (முருகு ) | (முருகு 294) |
| 277 | 27 | (குறள் ) | (குறள் 298) |
| 302 | 18 | யழுக்கார்புருவை | யழுக்கா ருருவை |
| 310 | 19 | தறிவுமைவஃதன்றி | தறிவா மஃதன்றி |
| | 24 | தோல். எழுத் | தொல். எழுத் |
| | 25 | துனிதென | துனியென |
| 311 | 2 | வினைமலந்தந்தமின் | வினைமலத் தந்தமின் |
| 314 | 23 | அருமையின் | அருமையின் |
| 324 | 12 | பாதச்சேதம் | பாசச்சேதம் |
| 333 | 2 | சசயிக்கும் | சயிக்கும் |
| 335 | 3 | சாலும் நின்னுடைய | சாலும்—நின்னுடைய |
| 339 | 5 | கடவுளொடஃதத்துறை | கடவுளொ டஃதுறை |
| 340 | 16 | அடி மூவுலகும் | அடி—மூவுலகும் |
| 347 | 30 | (1:47) | (சர்வஞா 1:47) |
| 351 | 5 | பூட்சித்தென்ன இயல்பு போல்வதாம் | பூட்சித்தென்ன-இயல்புபோல் வதாம் |
| 356 | 6 | குற்ற இன்ரும் | குற்றம் இன்ரும் |
| 366 | 20 | சிவஞாளபாடியத்தும் | சிவஞானபாடியத்தும் |
| 367 | 9 | முரண்மிகு | முரண்டகு |

| | | | |
|---|---|---|---|
| 391 | 16 | நலமிலி | நலமலி |
| 392 | 6 | உரிவவி | உருவவி |
| 394 | 5 | இசையில் | இச்சையில் |
| 397 | 2 | பிரபஞ் கிருத்தியமானது | பிரபஞ்ச கிருத்தியமானது |
| 399 | 33 | காரியதேசம்பற்றியே | காரிய பேதம்பற்றியே |
| 413 | 28 | காரியாத்தான் | காரியத்தான் |
| 415 | 20 | தொடக்கமார்த்தாண் டற்கின் | தொடக்கம் மார்த்தாண்டாற் கின் |
| 420 | 2 | அமயாத | அமையாத |
| | 38 | [illegible] | [illegible] |
| 439 | 13 | தூயமேனி | தூயயோனி |
| 442 | 20 | போதுலாது | போலாது |
| 451 | 30 | என்று கூறு | என்றும் கூறு |
| 461 | 21 | தேவிகலோததரம் | தேவிகாலோத்தரம் |
| 488 | 24 | உற்றவை | உற்றவை |
| 499 | 32 | இயைா | இயையா. |



ஸ்ரீவித்யா பிரஸ், கும்பகோணம்.




Rajaraja Abhaya Kulasekhara Chola I.
[A.D. 985—1013]

## ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் ஞாபகார்த்தத் தமிழ்ப் பரிசு ரூ. 1000, ஆயிரம்.

நம்முடைய அன்பார்ந்த அரசரும், சக்கரவர்த்தியுமான ஐந்தாம் ஜார்ஜு மன்னரவர்களுடைய உதார குணத்தையும், தயாள சிந்தையையும், இந்தியாவின் பாலிருந்த அன்பையும் கருதி அவர்களுடைய இனிய ஞாபகம் என்றும் குன்ருதிருந்துவரும் பொருட்டு இந்தப் பரிசு திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் சுவாமிகளவர்களால் ஏற்படுத்தப் பெற்றது. இந்தப் பரிசின் நோக்கம் தமிழ்மொழிப் பயிற்சிக்கும் ஆராய்ச்சிக்கும் ஆதரவு அளிப்பதேயாகும். "ஐந்தாம் ஜார்ஜு மன்னர் ஞாபகார்த்தத் தமிழ்ப் பரிசு" என இது வழங்கப்பெறும்.

இந்தப் பரிசுக்குரிய மூல தனமாக இப்பொழுது உள்ள தொகை முப்பத்தைந்தாயிரம் ரூபாய் (35,000). இத் தொகை நூற்றுக்கு வருஷத்துக்கு $3\frac{1}{2}$ வட்டியுள்ள கால வரையறை யில்லாத சர்க்கார் கடன் பத்திரமாக உள்ளது. இதிலிருந்து வருஷந்தோறும் கிடைக்கும் வட்டியிலிருந்து ரூபாய் ஆயிரம் (ரூ. 1000) வருஷந்தோறும் ரொக்கப் பரிசாக அளிக்கப்பெறும். 1935–36-ம் வருஷத்துச் சென்னை சர்வ கலாசாலைக் காலண்டர் தொகுதி 1, பகுதி 2ல் கண்ட 7–D விதிப்படி யமைந்த தனித்தமிழ் வித்துவான் பட்டத்துக்குரிய முடிவுப் பரீக்ஷையில் முதல் வகுப்பில் முதல்வராகத் தேர்ச்சி பெறுவோர் இப் பரிசைப் பெறும் தகுதியுடையோராவர். மூலதனத்தின் வட்டியில் இவ்வாறு செலவானது போக வருஷந்தோறும் எஞ்சும் தொகை மூலதனம் லக்ஷம் ரூபாய் (ரூ. 100,000) ஆகும் வரையில் அதனோடு சேர்க்கப்படும். அதன்பின் மூலதனத்திற்குக் கிடைக்கும் வட்டி முழுவதும் வருஷந்தோறும் பரிசுத் தொகையாக உரியவருக்கு அளிக்கப்படும்.

பரிசளிப்பதற்குரிய விதிகளும் நிபந்தனைகளும் வருமாறு :—

1. இப் பரிசு ஆண்பாலர் பெண்பாலராகிய யாவருக்கும் ஜாதி மத வேறுபாடு கருதாமல் அளித்தற்குரியது.

2. ஓரியண்டல் பட்டப் பரீக்ஷைகளுள் தனித் தமிழ் வித்வான் பரீக்ஷையில் தேர்ச்சி பெறுவோர்களுள் முடிவுப் பரீக்ஷையில் முதல் வகுப்பில் முதல்வராக வருபவர் முதல் முறையிலேயே தேறினவராயின் அவருக்கு இப் பரிசு அளிக்கப்பெறும்,

எந்த வருஷத்திலாயினும், இருவரேனும் இருவருக்கு மேற்பட்டவரேனும் பரிசுக்குரிய தகுதியைப் பெற்ருல் பிரிலிமினரிப் பரீக்ஷையில் பெற்ற அம்சங்களையும் (Marks) சேர்த்துப் பார்த்து மொத்தத்தில் அதிக அம்சம் பெற்றவருக்கு இப் பரிசு அளிக்கப்படும். அவ்வாறு செய்வதிலும் சிக்கல் நேருமாயின், தேர்ச்சி பெற்றவர்களுடைய ஆங்கிலப் பயிற்சியையும் வயதையும் ஆராய்ந்து, அவர்களுள் அதிக ஆங்கிலப் பயிற்சியுடையவருக்கும், குறைந்த வயது உடையவருக்கும் பரிசைக் கொடுக்க ஸிண்டிகேட் சபையினர் தீர்மானிப்பார்கள்,

3. ஸெனெட் சபைக் கூட்டமொன்றில் இந்தப் பரிசு உரியவருக்கு வழங்கப்பெறும். எந்த வருஷத்திலேனும் பரிசுக்கு உரியவர் நேரில் வந்து பரிசைப் பெற்றுக்கொள்ள முடியாமற் போனால் ஸிண்டிகேட் சபையார் பரிசுத் தொகையை அவருக்கு அனுப்புவதற்குரிய ஏற்பாட்டைச் செய்வார்கள். பரிசு வழங்குவதற்கு முன் அப் பரிசுக்குரியவர் இறக்கும்படி நேர்ந்தால் அத் தொகை சட்டப்படி அவருடைய வார்சாக இருப்பவரிடம் சேர்ப்பிக்கப்படும்.

4. இப் பரிசுத் தொகை பணமாகவேனும் செக்காகவேனும் அளிக்கப்பெறும். இந்தப் பரிசுத் தொகை எந்தக் காரணத்தைக் கொண்டாவது பகுக்கவோ குறைக்கவோ படாது. எந்த ஒரு வருஷத்திலேனும் அல்லது தொடர்ந்து பல வருஷங்களிலேனும் பரிசு கொடுக்கப்படாமல் இருந்தால் அங்ஙனம் கொடுக்கப்படாமல் இருந்த பரிசுத் தொகை முழுவதும் சேர்த்து, எந்த வருஷத்தில் பரிசு வழங்கப்படுகிறதோ அவ்வருஷத்தின் பரிசுக்குரியவருக்கே அளிக்கப்பெறும். பரிசுத் தொகைக்கு மேலே கிடைக்கும் தொகைதான் மூல தனத்தோடு சேர்க்கப்படும்.

5. வருஷந்தோறும் பரிசளிப்பு விபரம், பரிசு பெறுபவரின் பெயர், விலாசம் ஆகியவற்றோடு திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் சுவாமிகளவர்களுக்கும், அவர்களுக்குப் பின் வரும் உரிமையுள்ளவர்களுக்கும் (Successors in Interest) தெரிவிக்கப்படவேண்டும்.

6. பரிசு ஏற்படுத்தியவர்களுடைய நோக்கத்துக்கு வேறுபட்ட எந்தக் காரியத்துக்கும் இந்த நிதியை உபயோகிக்கக் கூடாது. இனி எப்பொழுதேனும் சர்வ கலாசாலையாரின் 7–D விதிப்படி யமைந்த தனித்தமிழ் வித்துவான் பட்டப் பரீக்ஷைக்குப் பிரதியாக ஏதேனும் ஏற்பட்டாலும், ஷை பரீக்ஷைக்குரிய விதிகள் மாறுபட்டாலும் பரிசை ஏற்படுத்தியவர்களுடைய நோக்கமாகிய தமிழ்க் கல்வி யபிவிருத்திக்கு ஏற்றதென்று கருதும் வகையில் ஸிண்டிகேட் சபையார் இந்தப் பரிசை உரியவருக்கு அளிக்க ஏற்பாடு செய்யும் உரிமையைப் பெறுவார்கள்,

7. பரிசு கொடுத்தது போக எஞ்சும் வட்டித்தொகையையும், மூலதனத்தையும் கவர்ன்மெண்டார் எப்போதேனும் திருப்பிக் கொடுக்க நேர்ந்தால் அத் தொகையையும் எந்தவிதமான பத்திரங்களிலேனும், வேறு வகையிலேனும் வைத்துப் பாதுகாக்கும் உரிமை ஸிண்டிகேட் சபையாருக்கு உண்டு.

**காசிமடம்,**<br>**திருப்பனந்தாள்.** } **காசிவாசி சாமிநாத தம்பிரான்.**

**குறிப்பு :**—மேலேகண்ட மூலதனம் எண்டௌமெண்ட் சென்னை சர்வ கலாசாலையாருடைய அங்கீகாரம் பெற்று 1937–38-ம் வருஷத்திய யுனிவர்ஸிட்டி, காலண்டர் பகுதி 2-ல் 129, 130-வது பக்கங்களில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

# SRI ARULNANDI SIVACHARYA SWAMIGAL SIVAGNANA SIDDHIAR LECTURESHIP ENDOWMENT

BY

*His Holiness Srilasri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal of Tiruppanandal in memory of the late Srilasri Kasivasi Swaminatha Tambiran Swamigal Avergal, to encourage the study of and the spread of the learning in the Saiva Siddhanta Sastras.*

---

1. This endowment was founded by His Holiness Srilasri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal of Tiruppanandal in memory of his predecessor the late Srilasri Kasivasi Swaminatha Tambiran Swamigal Avergal to encourage the study of and the spread of learning in Saiva Siddhanta.

2. The Endowment for the lectureship consists of 3½%. Nonterminable Government Promissory Notes of the face value of Rs. 15,000 (Rupees Fifteen Thousand.) The interest on this investment shall be utilised for the honorarium for a series of lectures, not less than four in number, annually at the Benares Hindu University and Allahabad University. The honorarium shall be Rs 400 unless revised later with the consent of the donor and with a view to the lectures being given in other Indian University centres. Such excess of income as there may be over the honorarium fixed will be added every year to the corpus of the fund. Should at any time the Syndicate consider that no applicant has shown sufficient ability to justify the delivery of the lectures in that particular year or years, the amount of interest accrued shall be added to the corpus of the fund.

3. The terms and conditions of the lectureship are as follows :—

(i) The course of lectures which shall be not less than four, three on the Benares Hindu University and one in the Allahabad University, shall be delivered annually at the University centres fixed by the University on a subject explaining the principles of Saiva Siddhanta. The increase in the number of lectures shall be subject to the conditions in para 5 infra.

(ii) The lecturer shall be appointed every year by the Syndicate of the Annamalai University either from among the Hindu members of the staff of the University or other Hindus, experts in the Saiva Siddhanta Philosophy. Every year there shall be a new lecturer. The lecturer once selected may have a second turn only after the lapse of 12 years.

(iii) The lecturer shall be chosen irrespective of sex or caste.

(iv) The lecturer should within a month after the delivery of the lectures present to the Annamalai University as well as the donor of this Endowment and his successors in interest, a copy each of his lectures. The University may print and publish the lectures at the discretion of the Syndicate.

(v) The lectures shall be the result of a deep study of the sutras of (a) Sivagnana Siddhiyar, both Parapakkam and Supakkam and the six old commentaries on the Siddhiyar and (b) Sivaprakasam of Sri Umapati Sivachariar.

(vi) The lectures shall be arranged in consultation with the Benares Hindu University and the Allahabad University immediately before or after the Dasarah holidays.

(vii) The lecturer shall bring on his return a pot of the holy waters of the Ganges for presentation at the Lord Sri Nataraja shrine at Chidambaram for abishekam and intimate to the donor his having done so when he sends a copy of his lecture as required in clause 3(iv) supra.

(viii) The honorarium shall be paid either in cash or by cheque.

5. It shall be competent for the Syndicate of the Annamalai University to invest in any Government or other trustee securities (1) the sums available from year to year for investment from the interest in excess over the honorarium as also (2) the capital amount of the investment in case the Government Securities in which the amount is now invested are tendered for payment by Government.

6. If in the process of investment the face value of the paper increases and an enhancement of income results either by addition of unspent amounts or by reinvestment, such additional income shall be utilised to increase the number of University centres at which the lectures will be delivered and consequently the honorarium for the lecturer.

7. The Syndicate shall at the end of each year communicate to the donor or to his successors-in-interest the name and address of the lecturer and the honorarium paid and, if in any year no lecture is delivered, the amount at credit at the end of the year and shall also publish the accounts in an important Tamil or English Daily Newspaper. The deeds relating to :

| | |
|---|---|
| (1) The Rs 1,000 Tamil Prize Endowment perpetuating the memory of King George V. | in the Madras University. |

(2) The Promotion of Tamil Learning Endowment Fund for Rs. 1,00,000 (One Lakh):

Scheme approved by the Madras Govt. Notification No. 215 published in the Fort St. George Gazette Part I-B Educational dated 21—9—41.

(3) The Raja Raja Abhaya Kulasekara Chola Maharaja Memorial Endowment for Tevara Tirumurai Prize and publication of works of Tamil Literature and Grammar,

(4) The Tiruvalluvar Neethi Nool Prize Endowment,

(5) The Sekkilar Nayanar Memorial Tamil Prize Endowment,

(6) The Srilasri Kasivasi Adi Kumaragurupara Swamigal Momorial Tamil Prize Endowment,

(7) The Kavichakravarti Kambar Memorial Tamil Prize Endowment,

(8) The Sri Nambi Andar Nambi Memorial Panniruthirumurai Prize Endowment,

(9) The Kottaiyur Sri Sivakkolundu Desigar Memorial Isai Tamil Prize Endowment,

(10) The Sri Manikkavachaka Swamigal Memorial Ahapporul Tamil Prize Endowment,

(11) The Srilasri Kasivasi Adi Kumaragurupara Swamigal Memorial Tamil Prosody Prize Endowment,

(12) The Srilasri Kasivasi Chokkalinga Swamigal Memorial Rhetoric Tamil Prize Endowment.

(13) The Kottaiyur Sri Sivakkolundu Desigar Memorial Tiruvachakam Prize Endowment,

(14) The Meikandar Memorial Saiva Siddhanta Sastra Prize Endowment,

(15) The Srilasri Kasivasi Adi Knmaragurupara Swamigal Memorial Saiva Siddhanta Sastra Prize Endowment along with the figure of Srilasri Kasivasi Adi Kumaragurupara Swamigal,

In the Annamalai University.

(16) The Sri Thirugnanasambandamurti Nayanar Memorial Tamil Isai Prize Endowment,

(17) The Sri Kasivasi Tillainayaga Swamigal Memorial Tamil Cash Prize Endowment,

Approved by Madras Govt in its G. O. No. 28 Education, dated 10-1-44

and

(18) The Sri Arulnandi Sivacharya Swamigal Sivagnana Siddhiyar Lectureship Endowment, i. e., these 18 deeds shall be published every one of the editions of the publications made under the 3rd endowment mentioned above.

True copy

---

## (25) The Tiruvalluvar Neethi Nool Prize

BY HIS

## HOLINESS SRILASRI KASIVASI SWAMINATHA TAMBIRAN SWAMIGAL AVARGAL OF TIRUPPANANDAL.

1. This Endowment was founded by his Holiness Srilasri Kasivasi Swaminatha Tambiran Swamigal Avargal of Tiruppanandal to encourage the study of Tirukkural and other books of ethics in Tamil Literature.

2. The Endowment for the Prize consists of 3 per cent Government Promissory Notes of 1949-52 (Defence War loan) of the face value of Rs. 3500/-(No. Ms. 004054, Rs. 500/- and MS. 00405, 004056, and 004057, Rs. 1,000/-each). The interest on this investment shall be utilised for the award of a Prize annualy of the value of Rs. 100/-. The balance of interest after the award of the prize will be added to the corpus of the Fund. When the above pronotes mature, the proceeds shall be invested in other Government Securities yielding a higher total income for the Endowment.

3. The following are the terms of award of the Prize:—

(i) The Prize shall be awarded irrespective of sex, caste, religion and nationality,

(ii) To be eligible for the award, the following shall be the conditions:—

(*a*) A pass in the Preliminary Examination of the Vidvan course, Tamil alone, of the Annamalai

or the Madras University or any other examination (of any University which may be considered equivalent to the Preliminary Vidvan Examination of the two Universities above named or the Bala Pandita Examination of the Madura Tamil Sangam, as a condition precedent to appearance for the test.

(b) First rank at the first appearance among competitors in a test to be conducted annually for the purpose by the Annamalai University, securing not less than 60% of marks. The test will be on the Tirukkural of Tiruvalluvar and 21 other text-books of proverbs and maxims of ethics given in the list appended hereto. The candidates shall be expected to be intimately acquainted with the various commentaries and elucidations; the meaning of words, paraphrase, purport of verses and the special extant notes on the text shall be mastered by those that compete. In Tirukkural, in particular, they shall have memorised the text in the orthodox form. A recital of a portion or portions of the text chosen by the examiners shall form part of the oral test for the award of the Prize.

(iii) If two or more competitors should be considered equally eligible for the award, lots shall be cast to decide who will have the prize or prizes of the year.

4. The prize shall be awarded at a meeting of the Syndicate of the Annamalai University. If in any year the prize-winner is unable to be present to receive the prize, the Syndicate shall arrange to send him the prize amount. If the prize winner dies before the prizes is presented to him, the prize amount shall be paid to his legal heir or heirs.

5. The prize amount shall be paid either in cash or by cheque and shall not under any circumstances be either divided or reduced.

6. If, in any year, the prize be not awarded, the interest on the endowment accrued for that year, *minus* Rs. 50/- shall be added to the corpus of the fund. In the next succeeding year in which a prize is awarded, the value of that year's prize will be Rs. 150/-, i.e. to the sum of Rs. 100/- (value of the prize for each year) small be added Rs. 50/- which has been reserved as above.

If for a series of years the prize could not be awarded, sums at the rate of Rs. 50/- for each year of no award shall be set apart to be given to the successful competitor of the year when an award is possible, *i.e.*, the successful competitor of the year preceded by a series

of years of no award will get Rs. 100/- of the year in which he competes, plus Rs 50/- for each preceding year of no award.

7. If in the process of investments the face value of the paper increases and an addition to income results either by addition or unspent amounts under clause (6) above, of such reinvestments, such additional income may, at the discretion of the Syndicate of the Annamalai University, be utilised to institute second and third prizes and, thereafter, to increase the value of each one of the three prizes.

8. The Syndicate shall at the end of each year, communicate to the Donor or to his successors-in-interest the name and address of the prize-winner and the amount of the prize, and if in any year, the prize be not awarded, the amount at credit at the end of the year and shall also publish the same in an important Tamil Daily Newspaper. This deed shall be published along with the deeds relating to the Rs. 1,000 Tamil Prize Endowment perpetuating the Memory of King George V in the Madras University and the Raja Raja Abhaya Kulasekhara Chola Maharaja Memorial Endowment in the Annamalai University by the same Donor in every one of the publications made under the last mentioned Endowment.

9. The income from the Endowment and the accumulations thereto shall not be diverted to any other purpose.

1. ஆத்திசூடி
2. கொன்றைவேந்தன்
3. மூதுரை
4. நறுந்தொகை
5. உலகநீதி
6. நல்வழி
7. நன்னெறி
8. நீதி வெண்பா
9. அறநெறிச்சாரம்
10. நீதிநெறிவிளக்கம்
11. சோமேசர் முதுமொழி வெண்பா
12. ஏலாதி
13. சிறுபஞ்ச மூலம்
14. நான்மணிக்கடிகை
15. திரிகடுகம்
16. இன்னா நாற்பது
17. இனியவை நாற்பது
18. ஆசாரக்கோவை
19. முதுமொழிக்காஞ்சி
20. பழமொழி நானூறு
21. நாலடியார்
22. திருக்குறள்

## (26) The Sekkilar Nayanar Memorial Tamil Prize

BY

## HIS HOLINESS SRILASRI KASIVASI SWAMINATHA TAMBIRAN SWAMIGAL AVERGAL OF TIRUPPANANDAL

1. This Endowment was founded by His Holiness Srilasri Kasivasi Swaminatha Thambiran Swamigal Avargal of Tiruppanandal to encourage the study of *Periyapuranam* and 27 other selected books in Tamil Literature.

2. The Endowment for the Prizes consists of 3% Government Promissory Notes of 1949-52 (Defence War Loan) of the face value of Rs. 3,500/- (Rupees Three Thousand and five hundred only.) The interest on this investment shall be utilised for the award of a prize annually of the value of Rs. 100/-. The balance of the interest after the award of the prize will be added to the corpus of the fund. When the above pro-notes mature, the proceeds shall be invested in other Government Securities yielding a higher total income for the Endowment.

3. The following are the terms of award of the prize :—

(i) The prize shall be awarded irrespective of sex, caste, religion and nationality.

(ii) To be eligible for the award, the following shall be the conditions :—

(*a*) A pass in the Preliminary Examination of the Vidvan course, Tamil alone, of the Annamalai or the Madras University or any other examination (of any University which has already been or may be established hereafter) which may be considered equivalent to the Preliminary Vidvan Examination of the two Universities above named, or the Bala Pandita Examination of the Madura Tamil Sangam, as a condition precedent to appearance for the test.

(*b*) First rank at the first appearance with not less than 60% of the marks in a competitive test to be conducted annually for the purpose by the Annamalai University. A selection of 750 stanzas in all, 250 of which will be from *Periyapuranam*, and the remaining 500 from the other 27 books in the list appended hereto, will be made once in every 4 years by the Annamalai University—the selections for one period of four years being different from those for the next period or periods of four years. At the competition (i) the first part will consist of a memory test of selections made by the examiners out of the 750 stanzas. In this oral memory test, special credit will be awarded for singing the verses in correct music ; for this singing the marks will be 10. (ii) The second part will consist of a test of the meaning and the purport of the 750 stanzas above referred to, wherein a knowledge of the meaning of words, paraphrase, purport of the verses and the special extant notes would be tested. (iii) The third part of the competition will context of giving explanations with

reference to the consist to portions of the whole of *Periyapuranam, Tiruvilaiyadal puranam* and *Kandapuranam* chosen by the examiners.

(iii) If two or more competitors should be considered equally eligible for the award, lots shall be cast to decide who will have the prize or prizes of the year.

4. The prize shall be awarded at a meeting of the Syndicate of the Annamalai University. If in any year the prize-winner is unable to be present to receive the prize, the Syndicate shall arrange to send him the prize amount. If the prize-winner dies before the prize is presented to him, the prize amount shall be paid to his legal heir or heirs.

5. The Prize amount shall be paid either in cash or by cheque and shall not under any circumstances be either divided or reduced.

6. If in any year, or a series of years, the prize be not awarded, from out of the annual interest of the Endowment, Rs. 50/–in each year of no award shall be set apart. The entire amount so set apart, shall be awarded in the subsequent year to the candidate eligible for the award along with the prize amount of that year. After setting apart Rs. 50/–as above, the balance of annual interest shall be added to the corpus of the fund at the end of each year.

7. If in the process of investments the face value of the paper increases and an addition to inome results either by addition of unspent amount under clause (6) above, or by reinvestment, such additional income may, at the discretion of the Syndicate of the Annamalai University, be utilised to institute second and third prizes and, thereafter, to increase the value of each one of the three prizes.

8. The Syndicate shall at the end of each year communicate to the Donor or to his successors-in-interest the name and address of the prize-winner and the amount of the prize and if in any year the prize be not awarded, the amount at credit at the end of the year and shall also publish the same in an important Tamil Daily Newspaper. This Deed shall be published along with the deeds relating to the Rs. 1,000/– Tamil Prize Endowment perpetuating the memory of King George V in the Madras University and the Raja Raja Abhaya Kulasekhara Chola Maharaja Memorial Endowment in the Annamalai University made by the same Donor in every one of the editions of the publications made under the 2nd Endowment mentioned above.

9. The income from the Endowment and the accumulations thereto shall not be diverted to any other purpose.

| தொடர்ந்த நம்பர். | நூல்களின் பெயர்கள் | நூலாசிரியர்களின் பெயர்கள். |
|---|---|---|
| 1. | விநாயக புராணம். | கச்சியப்ப சுவாமிகள். |
| 2. | திருப்பரங்கிரிப் புராணம். | நிரம்ப அழகிய தேசிகர். |
| 3. | திருகூவப் புராணம். | சிவப்பிரகாச சுவாமிகள். |

